Regd. No. M. 9994 Phone: No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)



மலர் 16 இதழ் 44] சென்னை 29-9-59 விகாரி ஹூ புரட்டாசிமீ 13உ செவ்வாய்க்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# இந்திய-சீன நட்புறவைக் குலைக்க பிற்போக்காளர் சதி!

## சீனு கோரும் பகுதிகள் பற்றி காங்கிரஸ் காரியக் கமிட்டியின் புதிய தீர்மானம்

சாந்நிகர், செப். 27—

இந்திய-சீன எல்லைப் பிரச்னை பற்றி, சென்ற வாரத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானம் கடுமையானதாகவும், சமரசப் பேச்சு மூலம் உடன்பாடு காணமுடியாதவாறு கதவடைப்புச் செய்வதாகவுமிருப்பதாகக் கருதி, இந்த வாரத்தில், அதில் மாறுதல் செய்திருக்கிறார்கள்.

வடக்கு, வடகிழக்கு எல்லைகளில் சீனுவின் கோரிக்கை அதிகமாக இருப்பதாகவும், எனவே அதுபற்றி குறிப்பிடுவதாகவும் புதிய தீர்மானம் கூறுகிறது.

### சமரசப் பேச்சு மூலமே

தீர்மானத்தில், "எல்லை விஷயமாக, ஏதாவது சிறு பகுதிகள் பற்றி சந்தேகம் எழுந்தால், அதை சமாதானமாக சமரசப் பேச்சுவார்த்தை மூலமே இரு நாடுகளும் தீர்த்துக் கொள்ள வேண்டும்" என்று தீர்மானம் குறிப்பிடுகிறது.

"அதிகமான பகுதிகளை சீனு கோருவதை ஏற்க முடியாதென்றும், அது அநியாயமானதென்றும், ஆகவே அந்தக் கோரிக்கையை விட்டு விட்டு இரு நாடுகளின் உறவையும் முன்போலவே சமாதானமான முறையில் அமைக்கவேண்டும்" என்றும் தீர்மானம் குறிப்பிடுகிறது. மேலும் சீனுதான் பஞ்சசீலத்தை மீறி நெருக்கடியை ஏற்படுத்தியதாகவும், திபேத் சம்பந்தமாக 1954-ல் சீனுவுக்கும் இந்தியாவுக்கும் உடன்பாடு ஏற்பட்ட போது, இரண்டு நாடுகளுக்கு மிடையில் எந்தவொரு பிரச்சினையும் இல்லையென்று சீனு கூறியதாகவும்" தீர்மானம் கூறுகிறது.

சென்றவார தீர்மானம் பற்றி காங்கிரஸ் தலைவர் இந்திரா காந்தி பேசுகையில்,

"சென்றவாரம் நிறைவேற்றிய தீர்மானம் அவசர அவசரமாக நிறைவேற்றப்பட்டதென்றும், இந்தத் தடவை நிறைவேற்றியது ஆற அமர யோசித்து, பலருடைய ஆலோசனைகளையும் பரிசீலித்து நிறைவேற்றிய தீர்மானமென்றும் குறிப்பிட்டார்.

### சென்ற வார தீர்மானம்

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் விவாதத்துக்காக, சென்ற வாரம் அவசர அவசரமாக காங்கிரஸ் காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானம் பின்வருமாறு: இந்தியாவின் வடகிழக்கு எல்லையில் சமீப காலத்தில் ஏற்பட்டுள்ள நிகழ்ச்சிகளைக் கண்டும், இந்தியாவின் அந்தப் பகுதியில் அதிகமான இடத்தை சீனு தனக்குச் சேரவேண்டுமென்று உரிமை பாராட்டுவதைப் பற்றியும் அ. இ. கா. கமிட்டி மிகுந்த கவலை கொள்ளுவதாகவும், ஒப்பந்தம் மூலமாகவும் நீண்டகால அனுபவம் மூலமாகவும் இந்த இடம் இந்தியாவுக்கே சொந்தமாக உள்ளதால் அதில் சீனு உரிமை கொண்டாடுவதை அனுமதிக்க முடியாதென்றும், பலாத்காரமாக ஏதாவது உள்புகுதல் ஏற்பட்டால் எதிர்க்கப்படுமென்றும், சகல தகராறுகளையும் அமைதியான முறைகளிலேயே தீர்த்து கொள்ளுவதுதான் இந்தியாவின் கொள்கை யென்றும் அத்தீர்மானம் கூறுகிறது.

### தீர்மானம்

சீனு கேட்கும் பகுதிகளான வடக்கு, வடகிழக்குப் பகுதிகள் ஒப்பந்தம் மூலமாகவும் நீண்டகால அனுபவம் மூலமாகவும், இந்தியாவுக்கு சொந்தமாகுமென்றும், அப்பகுதிகளை சீனு கேட்பதை அனுமதிக்க முடியாதென்றும் பலாத்காரமாக அதனுள் புகுந்தால், அதை எதிர்ப்போமென்றும் கூறுகிறது.

மேலும், "2000 வருட காலமாகவும் சமாதான வாழ்வும் நடத்திய சீனுவும் இந்தியாவும், 1954-ம் ஆண்டில் திபேத் விஷயமாக பஞ்சசீல சகஜீவன ஒப்பந்தம் செய்து கொண்டு அந்த உறவை மேலும் பலப்படுத்தி உறுதி செய்தனவென்றும், ஆனால் பஞ்சசீலத்தை மீறி நெருக்கடி நிலைமையை உண்டாக்கியது சீன சர்க்காரதான் என்றும் தீர்மானம் குற்றம் சாட்டியுள்ளது.

## இரு நாடுகளிடை நட்பு தழைத்தோங்க மக்களுக்கு வேண்டுகோள்

### கம்யூனிஸ்ட் கட்சி மத்திய நிர்வாகக் கமிட்டியின் தீர்மானம்

கல்கத்தா, செப். 26—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தேசியக் கவுன்சிலின் மத்திய நிர்வாகக் கமிட்டி இந்திய-சீன உறவு பற்றி நிறைவேற்றிய ஒரு தீர்மானத்தில், இந்தியாவுக்கும் சீனுவுக்கும் இடையில் தீர்க்கப்படாமல் உள்ள எல்லாப் பிரச்சினைகளுக்கும் தீர்வு காண்பதற்கு பேச்சுவார்த்தைகளைத் துவக்குவதற்கு, மக்மஹோன் எல்லைக் கோடோ அல்லது வெளியிடப்பட்டுள்ள சீன தேசப் படங்களோ ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்று வற்புறுத்தப்பட வேண்டியதில்லை என்று கூறப்பட்டுள்ளது.

கடந்த இரண்டு நாட்களாக இந்திய-சீன உறவுகளைப் பற்றி நிர்வாகக்கமிட்டி 12 மணி நேரம் தீர்க்கமாகவே விவாதித்தது. நேற்றிரவு 1-30 மணி சுமாருக்கு இந்திய-சீன உறவுகள் பற்றிய தீர்மானம் இறுதியாக்கப்பட்டது.

கட்சியின் தேசியக் கவுன்சில் கூட்டம் நவ. 11 முதல் 15 வரை மீரத்தில் கூடுமென்றும், அதற்கு முன்னர் நவ. 8 முதல் 10 வரை மத்திய நிர்வாகக் கமிட்டி கூடுமென்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

#### தீர்மான முழு விபரம்

மத்திய நிர்வாகக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தின் முழு விபரம் பின்வருமாறு: (தீர்மானத்தின் சுருக்கம் நேற்று வெளியிடப்பட்டது.)

"இந்திய-சீன உறவில் சமீப மாதங்களில் சீர்கேடு ஏற்பட்டிருப்பதைக் கண்டு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தேசியக் கவுன்சிலின் மத்திய நிர்வாகக் கமிட்டி ஆழ்ந்த கவலை தெரிவிக்கிறது. குறிப்பாக இரு நாடுகளுக்கிடையில் அண்மையில் ஏற்பட்ட துரதிர்ஷ்டவசமான எல்லைச் சம்பவங்கள், தகராறுகள் பற்றி வருத்தமடைகிறது.

"இந்த துரதிர்ஷ்டவசமான சம்பவங்கள் இந்திய மக்களுக்கு மட்டுமன்றி, சுதந்திரத்தை நேசிக்கும் எல்லா ஆசிய மக்களுக்கும் மிகவும் கவலைதரும் விஷயமாகும். ஏனெனில், ஆசிய-ஆப்ரிக்க ஒற்றுமைக்கும், சுதந்திரத்திற்கும் இந்திய-சீன நட்புறவுதான் அடித்தளமாக இருந்து வந்துள்ளது. இந்த நட்புறவு எந்த அளவுக்கு பலஹீனமடைவது உலக சமாதான சக்திகளுக்கும் ஒரு பெரிய தாக்குதலாகும்.

"ஆசியாவின் இரண்டு மிகப் பெரிய நாடுகளுக்கிடையே அவநம்பிக்கை, பதட்ட சூழ்நிலையை ஏற்படுத்துவதற்கும், நூற்றாண்டு காலங்களாக நட்புறவுடன் வாழ்ந்துவந்த 100 கோடி மக்களிடையே பிளவு உண்டு பண்ணுவதற்காகவும், அக்கறையுள்ள சுயநலவாதிகள் மேற்படி சம்பவங்களை மிகப்பெரிய அளவுக்கு மிகைப்படுத்தி வருகின்றனர்.

"இந்த இரு நாடுகளுக்கிடையிலும் எல்லைகளை நிர்ணயிப்பதில் சில அடிப்படையான வித்யாசங்கள் எழுந்துள்ளதை மத்திய நிர்வாகக் கமிட்டி உணருகிறது. குறிப்பாக, சம்பந்தப்பட்ட பிரதேசங்கள் சரியாக சர்வே செய்யப்படவோ, எல்லை நிர்ணயம் செய்யப்படவோ இல்லாததால் இந்த வித்யாசங்கள் எழுந்துள்ளன. இந்தியா சுதந்திரமடைந்த பிறகும், சீனக் குடியரசு ஏற்படுத்தப்பட்ட பிறகும் இந்தப் பிரச்சினை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படவேயில்லை. ஆயினும் இரு தரப்பினரும் மக்மஹோன் கோட்டையும், சீன தேசப்படங்களையும் வற்புறுத்தாமல், சினேகபூர்வமான விவாதம் மூலமும் பேச்சுவார்த்தை மூலமும் இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண முடியும்.

#### அடிப்படை

"இரு நாடுகளின் பிரதிநிதிகள் வெளியிட்ட அறிக்கைகளில் தீர்வுக்காகப் பேச்சுவார்த்தைகளைத் துவக்குவதற்கு அடிப்படை ஏற்கனவே இருக்கிறது.

"1959 மார்ச் 22-ல் பிரதமர் நேரு சீனப் பிரதமருக்கு எழுதிய கடிதத்தில், "சமீபத்திய தகராறுகளுக்கு முன்னர் இருந்த நிலைமையை இருவரும் மதிக்கவேண்டும். எந்தத் தரப்பினரும், தங்களுடைய உரிமையென்று கருதுவதை செயல்படுத்துவதற்கு ஒருதலைப்பட்சமான முறையில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளக் கூடாது" என்று கூறியுள்ளார்.

"அண்மையில், செப். 13-ல் சீனுவின் 2-வது தேசிய மக்கள் காங்கிரசின் நிரந்தரக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தில் இதே போன்ற கருத்துகள் தெரிவிக்கப்பட்டுள்ளன.

"பிரதம மந்திரி நேருவும், சீன 2-வது தேசிய மக்கள் காங்கிரசின் நிரந்தரக் கமிட்டியும் இத்தகைய ஆக்கபூர்வமான நிலையைக் கடைப்பிடித்ததை மத்திய நிர்வாகக் கமிட்டி மிகவும் பாராட்டுகிறது. இத்தகைய கருத்துகளுக்கு ஏற்ப நடைமுறை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டால் நிலைமை நிச்சயம் அபிவிருத்தியடையும். எல்லைப் பிரச்சினை

(4-ம் பக்கம் பார்க்க)

## சகல பிரச்னைகளுக்கும் சமாதானமாகவே தீர்வு

### படைக் கலைப்பு விஷயத்தில் தீவிர அக்கறை

### ரஷ்ய-அமெரிக்க எதிர்கால சுமூக உறவில் நம்பிக்கை

#### குருஷ்சேவ்-ஐக் கூட்டறிக்கை

கெட்டிஸ்பர்க், செப். 28—

"பொதுவான படைக்கலைப்பு பிரச்சினைதான் இன்று உலகத்தை எதிர் நோக்கிக் கொண்டிருக்கின்ற முக்கிய பெரும் பிரச்சினையாகும். இப்பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்கு இரு நாடுகளின் அரசாங்கங்களும் ஒவ்வொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளும்" என்று நேற்று குருஷ்சேவும், ஐசனேவரும் விடுத்துள்ள கூட்டறிக்கையில் கூறியுள்ளார்கள்.

உலகமே எதிர் நோக்கிக் கொண்டிருந்த, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அவர்களது டேவிட் முகாம் பேச்சுவார்த்தை முடிவுற்ற ஒரு மணி நேரத்திற்குப் பின்னர் இவ்வறிக்கை வெளியிடப்பட்டது. ஐநூறு சொற்கள் அடங்கிய அவர்களது அறிக்கை மேலும் 'சர்வதேசப் பிரச்சினைகள் பலாத்காரத்தின் மூலம் அல்லாது, சமாதான பூர்வமான பேச்சுவார்த்தைகளின் மூலம் தீர்க்கப்பட வேண்டும். கருத்துக்கள் பரிமாறிக் கொள்ளப்பட்ட பொழுது ஜெர்மனிப் பிரச்சினை சம்பந்தமாகவும் ஜெர்மனியோடு சமாதான ஒப்பந்தம் செய்து கொள்வது சம்பந்தமாகவும் பேசப்பட்டது. இருவரும் இப்பிரச்சினைகள் சம்பந்தமாக தங்களது நிலைமைகளை விவரித்துக் கூறினார்கள். ஜெர்மனிப் பிரச்சினையோடு சம்பந்தப்பட்ட நாடுகளின் ஒப்புதல் பெற்றுக் கொண்டு, பிரச்சினைக்குத் தீர்வு காணும் முறையில் எல்லோரது நலனையும், சமாதானத்தைப் பாதுகாக்க வேண்டிதன் அவசியத்தையும் உணர்ந்து பேச்சுவார்த்தை தொடங்க வேண்டும்" என்று கூறுகிறது.

அவ்வறிக்கை மேலும் "எதிர்காலத்தில் இருநாடுகளுக்குமிடையே தூதுக்குழுக்கள் சென்று வருவதிலும், கருத்துப் பரிமாற்றத்திலும் அபிவிருத்தி ஏற்படுவதற்கான முறையில் சில முக்கிய உடன்பாடுகள் ஏற்படும் என்று எதிர்பார்க்கப் படுகின்றது. இருநாடுகளின் அரசாங்கப் பிரதிநிதிகள் சந்தித்துப் பேசும் பொழுது இவ்விஷயத்தில் போதுமான முன்னேற்றம் ஏற்படும். பல பிரச்னைகளில் ஒருவருடைய நிலைமை ஒருவர் தெளிவாகத் தெரிந்துகொள்வதற்கு சந்திப்பு பிரயோஜனகரமாக இருந்தது என்று இருநாட்டுத் தலைவர்களும் அபிப்பிராயப்படுகிறார்கள். சோவியத் யூனியன் அமெரிக்காவின் உறவைப் பாதிக்கக்கூடிய பல்வேறு பிரச்சினைகள் சம்பந்தமாக பலனுள்ள பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. இருநாடுகளுக்குமிடையே வணிக உறவு வளருவது பற்றியும் பேசப்பட்டது. அமெரிக்க ஜனாதிபதி ஐசனேவர் வசந்த காலத்தில் சோவியத் யூனியனுக்கு வருகை தருவார்" என்று கூறுகிறது.

## மஞ்சள் உடைக் கொலையாளிகள்!

### தீவிர புலன் விசாரணை

கொழும்பு, செப். 27—

இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகாவை புத்த பிக்குவின் உடையில் ஒருவர் சுட்டுக்கொன்றது சம்பந்தமாகப் போலீசார் தீவிரப் புலன் விசாரணையில் ஈடுபட்டுள்ளனர்.

பண்டாரநாயகாமீது மரண வெடியைத் தீர்த்த சோமராம தேரோ ஒரு கண்வைத்திய நிபுணர் என்றும், நாட்டு வைத்தியக் கல்லூரியில் ஒரு விரிவுரையாளர் என்றும் தெரிகிறது. இவரும் நேற்று கைது செய்யப்பட்ட பத்ரசேகர தேரோ என்ற மற்றொரு மஞ்சள் உடை பிக்குவும் அக்டோபர் 6ல் நீதிமன்றத்தின் முன் கொண்டுவரப்படுவார்கள்.

## பாப்பாங்குளம் சொக்கலிங்கம் பிள்ளை காலமானர்

பழம்பெரும் தேசபக்தரும், அனைவராலும் 'அண்ணாச்சி' என்று அன்புடன் அழைக்கப்படுபவருமான பாப்பாங்குளம் திரு. சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் 24-8-59 அன்று மாலை (பாப்பாங்குளம்) தமது இல்லத்தில் மரணமடைந்தார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம்.

## இந்திய மாதர் தேசீய சம்மேளன மகாநாடு

### அக்டோபர் முதல்வாரம் காசியில் கூடுகிறது

புதுடில்லி, செப். 27—

அக்டோபர் முதல் வாரத்தில் காசியில் இந்திய மாதர் தேசிய சம்மேளன மகாநாடு கூடுகிறது. அம்மகாநாடு சம்பந்தமாக ஆயத்தங்கள் நடந்துகொண்டிருக்கின்றன.

மகாநாட்டின் வரவேற்புக் கமிட்டி காரியாலயம் செப். 13ம் தேதி காசியில் திறக்கப்பட்டது. திறப்புவிழாவின்போது திருமதி எஸ். குப்தா பேசுகையில் இம்மகாநாடு கூட்டப்படுவதால், காசியில் பலமான மாதர் ஸ்தாபனம் ஒன்று தோன்றுமென்று நம்புவதாகக் குறிப்பிட்டார்.

மகாநாடு நடப்பதுடன் காசி வரலாற்றில் முதன்முறையாக மாதர் ஊர்வலம் ஒன்று நடக்குமென்றும், அவ்வூர்வலத்தைத் தொடர்ந்து நடக்கும் பொதுக்கூட்டத்தில் திருமதி அருணா ஆஸப் அலி பேசுவாரென்றும் சம்மேளனத்தின் செயலாளர் ஹஜ்ராபேகம் கூறினார். மகாநாடு நடக்கும் தினங்களில் பொது கலை நிகழ்ச்சிகளும் உண்டு.

இம்மகாநாட்டைப் பற்றி விளம்பரப்படுத்த உத்தரப் பிரதேசத்தின் முக்கிய நகரங்களில் பல கூட்டங்கள் நடத்தப்படுகின்றன. மகாநாட்டிற்குப் பிரதிநிதிகளை அனுப்ப இதர ராஜ்யங்களில் ஆயத்தங்கள் நடப்பதாகவும் செய்திகள் வந்துள்ளன.

(பியூ எஜ்)

### மைசூர் அரசு மீது பி. சோ. குற்றப்பத்திரிகை

மைசூர், செப். 27—

மைசூர் மாநில அரசாங்கத்தின் மீது மாநில பி. சோ. கட்சி 'குற்றப் பத்திரிகை' தயாரித்து, அக்குற்றங்களுக்கு மூன்று மாதங்களுக்குள் அரசாங்கம் தக்க பதிலளிக்காவிட்டால் போராட்டம் தொடங்குவதென்று மாநில பி. சோ. செயற்குழுக் கூட்டம் தீர்மானித்திருக்கிறது.

## பரோடாவில் இ. எம். எஸ்.ஸுக்கு வரவேற்பு

பரோடா, செப். 27—

முன்னாள் கேரள முதலமைச்சர் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் நவசாரியிலிருந்து கார்மூலம் இங்குவந்து சேர்ந்தார். ஏராளமான மக்கள்கூடி தோழர் நம்பூதிரிப்பாடுக்கு இங்கு வரவேற்பளித்தனர். மாலையில் அவர் ஆமதபாத்துக்குப் புறப்பட்டார்.

பரோடாவின் ஆஸாத் மைதானத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் இ. எம். எஸ். பேசினர்.

### சோவியத் உதவி ஈரான் வரவேற்பு

டெஹ்ரான், செப். 26—

இயந்திரங்களை வரவழைத்து பாரசீக நாட்டை தொழில்மயப் படுத்த தான் விரும்புவதாகவும் அதற்கு சோவியத் யூனியன் தருவதாகக் கூறிய உதவியை தான் ஏற்க சித்தமாக இருப்பதாகவும் ஈரான் மன்னர் ஷா கூறினார்.

## கொட்டும் மழையில் 50,000 பேர் இ. எம். எஸ். கூட்டத்தில் திரண்டனர்

### ரூ. 10,300 பணமுடிப்பு அளித்தனர்

(நமது விசேஷ நிருபர் தந்தி)

பம்பாய், செப். 27—

கொட்டும் மழையிலும் சிவாஜி பார்க்கில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் 50,000 பேர் இங்கு இ. எம். எஸ்ஸின் பேச்சைக் கேட்டனர். கம்யூனிஸ்ட் கட்சி, விவசாயிகள்-தொழிலாளிகள் கட்சி, லால்நிஷான் குழு, புரட்சிகர கம்யூனிஸ்ட் கட்சி, பம்பாய் கேரளீய சமிதி ஆகியவற்றின் சார்பில வரவேற்பு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

#### மாலைகள், நோட்டுகள்

100 மலர் மாலைகள், 100 கரன்சி நோட்டு மாலைகள் இ. எம். எஸ். ஸிற்கு வழங்கப்பட்டன. மொத்தம் ரூ 10 300 பணமுடிப்பு அளிக்கப்பட்டது. பார்க்கர் பவுண்டன் பேனா, ரிஸ்ட் வாட்ச், தங்க மெடல், ஒரு தொழிலாளியின் ஒரு மாதச் சம்பளத் தொகை—ஆகியவையும் கேரளக் கம்யூனிஸ்ட் கட்சி தேர்தல் நிதிக்கு அளிக்கப்பட்டன.

தனக்களிக்கப்பட்ட பெரிய வரவேற்புக்கும் நன்கொடைகளுக்கும் இ. எம். எஸ். நன்றி தெரிவித்தார்.

"கேரளத்தில் ஜனாதிபதி ஆட்சி அரசியல் சட்டத்திற்கு உலை வைத்ததாகும். மக்களுக்கு அவர்கள் விரும்பும் சர்க்காரை வைத்துக்கொள்ள உரிமை மறுக்கப்பட்டது.

"தனக்கு இரு கண் போனாலும் கம்யூனிஸ்டுகளுக்கு ஒரு கண் போகவேண்டும் என்பதே பி. சோ. வின் கொள்கையாகவுள்ளது." என்று நம்பூதிரிப்பாட் குறிப்பிட்டார்.

பாகிஸ்தானில் ஏற்பட்ட ராணுவ ஆட்சி, பண்டாரநாயகா இலங்கையில் கொல்லப்பட்டது ஆகியவற்றைக் குறிப்பிட்டு, இந்தியாவில் ஜனநாயக சக்திகள் உஷாராக இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

## குருஷ்சேவ்-ஐக் பேச்சுவார்த்தை முன்னேற்றம்

### சீக்கிரமே உச்சகட்ட மகாநாடு நடைபெறலாம்

கெட்டிஸ்பர்க், செப். 28—

"அமெரிக்க ஜனாதிபதி ஐசனேவர் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்வதற்கு முன்னால் ஓர் உச்சகட்ட மாநாடு நடைபெறுவது சாத்தியமாக இருக்கக் கூடும்" என்று நேற்று வெள்ளை மாளிகையின் பத்திரிகைத் தொடர்பு செயலாளர் ஜேம்ஸ் ஹாகெர்ட்டி கூறினர்.

சோவியத் யூனியனுக்கு ஐசனேவர் போவதற்கு முன்னால் உச்சகட்ட மாநாடு நடைபெறுவது சாத்தியமா என்று ஒரு நிருபர் கேட்ட கேள்விக்குப் பதிலளிக்கையிலேயே மேற்கண்டவாறு கூறினர்.

ஐசனேவருக்கும், சோவியத் பிரதமருக்கும் நடைபெற்ற இரண்டு நாள் பேச்சுவார்த்தையின் மூலம் பெர்லின் பிரச்சினை சம்பந்தமாக முன்னேற்றம் காணப்படுகிறது. அவர்களுடைய பேச்சுவார்த்தைகள் சரித்திரம் முக்கியத்துவம் வாய்ந்தவை என்றும் கூறினர்.

அவர் பிறிதொரு கேள்விக்குப் பதிலளிக்கையில் "படைக்கலைப்புப் பிரச்னைதான் இன்று உலகத்தை எதிர் நோக்கிக் கொண்டிருக்கின்ற பெரும் பிரச்னை. முக்கியப் பிரச்னை என்பதை இரு தலைவர்களுமே ஒத்துக் கொண்டார்கள். படைக்கலைப்புப் பிரச்னைக்குத் தீர்வு காண்பதில் இரண்டு அரசாங்கங்களுமே முயற்சி செய்யும். எல்லா சர்வதேசப் பிரச்னைகளுமே பலாத்காரத்தின் மூலம் அல்லது போரின் மூலம் அல்லாது சமாதான பூர்வமான முறையில் பேச்சுவார்த்தையின் மூலமே தீர்க்கப்படவேண்டும் என்ற கருத்தையும் ஒத்துக் கொண்டார்கள்" என்றார்.

மற்றொரு கேள்விக்குப் பதிலளிக்கையில் "பல்வேறு பிரச்னைகளில் ஒருவருக்கொருவர் தெளிவடைவதற்கு குருஷ்சேவ் ஐக் பேச்சுவார்த்தை பயனுள்ளதாக இருந்தது. அமெரிக்காவின் நேச நாடுகளின் விருப்பத்தைப் பொறுத்தே உச்சகட்ட மாநாடு கூடுவதும் இருக்கிறது" என்று கூறினர்.

ஐக்-குருஷ்சேவ் சந்திப்பு ஜெர்மனி, பெர்லின் பிரச்சினை சம்பந்தமாக நான்கு வல்லரசுகளின் உச்சகட்ட மாநாடு நடைபெறுவதற்கு வழி வகுத்திருக்கிறது என்று அமெரிக்காவிலுள்ள ராஜதந்திரப் பார்வையாளர்கள் அபிப்பிராயம் கூறினர்கள்.

ஐக்-குருஷ்சேவ் சந்திப்பைத் தொடர்ந்து கிழக்கு-மேற்கு நாடுகளின் உச்சகட்ட மாநாடு நடைபெறுவதை பிரான்ஸ் வட்டாரங்களும் வரவேற்கும் என்று தெரிகிறது. அரசாங்க வட்டாரங்களிலிருந்து அதிகாரபூர்வமாக செய்தி ஏதுவும் வெளிவரா விட்டாலும், டிகாலே நேற்று ஒரு கூட்டத்தில் பேசுகையில் "ஐக்-குருஷ்சேவ் சந்திப்பு உடன்பாடு ஏற்படுவதற்கும், தெளிவு ஏற்படுவதற்கும் ஆரம்ப அடிப்படையாக இருக்கும் என்று கூறினர்.

## திருச்சி மாவட்டச் செய்திகள்

### நார்த்தாமலை வட்ட விவசாயிகள் சங்கக் கூட்டம்

புதுக்கோட்டை டிவிஷன் நார்த்தாமலையில் 28-8-59ல் திரு ஆர். முத்துவீரன் தலைமையில் நடைபெற்ற விவசாயிகள் சங்கத் திறப்புவிழா கூட்டத்தில் தோழர்கள் உமாநாத், வி. நாகு, கே. ரெங்கசாமி என். சுப்பிரமணியம் ஆகியோர் பேசினர். கூட்டத்தில் கேரளத்தில் ஜனநாயகத்திற்கு விரோதமாக கம்யூனிஸ்ட் மந்திரி சபையை அகற்றியதைக் கண்டித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தீர்மானத்தின் நகல் பிரதமர் நேருவுக்கும், இந்திய ஜனாதிபதிக்கும் அனுப்பிவைக்கப்பட்டது.

மேலும் சகல அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யவேண்டுமென்றும் சென்னை சர்க்காரைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. (க. நி)

### நச்சலூர்

நச்சலூர் ராஜா எலக்டிரிக் தியேட்டரில் 7-9-59ல் குளித்தலை வட்டார கம்யூனிஸ்ட் கட்சி நிதிக்காகத் தோழர் ஜி. ஜி. ராஜன் தயாரித்த 'விடி வெள்ளி' என்னும் நாடகம் நடைபெற்றது. திருச்சி செங்கொடி கலைஞர் குழுவினர் நடித்த இந்நாடகத்தில் ஜி. ஜி ராஜன், கே. பி எஸ். கோன், ஆர் ஜோதி, ஓ. டி. கண்ணன் கே ஜி நாராயணன், எம். ஆர். சுந்தரம், ஆர் கருணைராஜ், கலியமூர்த்தி, நடிகை சிந்தாமணி ஆகியோர் நடித்தனர். நாடகம் சிறப்பாகயிருந்தது. (க. நி)

### திருச்சி மாவட்ட உதவிபெறும் ஆரம்ப ஆசிரியர் சங்கம்

திரு. சந்தனசாமி தலைமையில் 8-9-59-ல் நடைபெற்ற நிர்வாகக் கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:

1. சென்னை மாநில கல்வி டைரக்டரின் மகன் மறைவுற்றது குறித்து கூட்டம் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

2. திருச்சி, செம்பட்டிலுள்ள எம். எம். உயர்தர ஆரம்பப் பள்ளியில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கு ஜூலை மாதச் சம்பளம் இன்றுவரையிலும் கொடுக்கப்படாமல் இருப்பதைக் கண்டு இக்கூட்டம் வருந்துவதோடு உடனடி சம்பளம் கிடைக்க மாவட்ட கல்வி அதிகாரிகள் ஆவன செய்ய வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறது.

3. திருச்சி செம்பட்டிலுள்ள எம். எம். உயர்தர ஆரம்பப் பள்ளி தலைமையாசிரியர் திருமதி டி. சரோஜினி எலிஸபெத், ஆசிரியர்களிடமிருந்து ரூ. 10 ஒவ்வொரு மாதமும் வசூலிக்க வேண்டுமென்று நிர்வாகம் கேட்டதற்கு இணங்காததால், அவருக்கு நோட்டீஸ் கொடுத்துள்ளதைக்கண்டு இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது

4. ஆசிரியர்கள் அனைவரும் வட்ட வாரியாக சங்கங்கள் அமைப்பதோடு தலைமை சங்கத்தையும் பலப்படுத்த முன்வர வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. (க. நி)

கூட்டுறவு விவாத அரங்கு

அரியலூரில் 14-9-59 முதல் 16-9-59 வரை கூட்டுறவு விவாத அரங்கு விழா நடைபெற்றது. திரு. எஸ் வரதராஜன் பி.ஏ. பி. எல். கொடி ஏற்றி வைத்தார். திரு எஸ். நடராஜ பிள்ளை தலைமை வகித்தார். திரு ஜி. வரதராஜன், பி. ஏ. விழாவை துவக்கி வைத்தார். திருவாளர்கள் எம். முனிரெத்தினம், பி. வி. சுப்பிரமணியம், எஸ் நடராஜன், எம் ஏ. பி. வெங்கடாசலம் பிள்ளை பி. ஏ. எல். ஆகியோர் பேசினர். (க. நி)

### நகரசுத்தித் தொழிலாளர் போராட்டம்

ஸ்ரீரங்கம் நகரசுத்தித் தொழிலாளர்களுக்கும், இதர சிப்பந்திகளுக்கும், ஆசிரியர்களுக்கும் முன்பு கிடைத்துவந்த வீட்டு வாடகை அலவன்ஸ் சென்ற 1-4-59 முதல் 1-8-59 முடிய ஐந்து மாத அலவன்ஸ் கிடைக்கவில்லை. இதை எதிர்த்து நகரசுத்தித் தொழிலாளர்கள் சம்பளம் வாங்காமல் போராட்டம் நடத்தி வந்தார்கள். இது சம்பந்தமாக திருச்சி ஜில்லா முனிசிபல் சங்கத் தலைவர் தோழர் ஆர். லட்சுமணன், ஸ்ரீரங்கம் நகரசுத்தித் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் எஸ் பெரியசாமி, கம்யூனிஸ்ட் கிளைக் காரியதரிசி தோழர் எம் எல் நாகசாமி நகரசபை நிருவாகத்தினரையும் கமிஷனரையும் சந்தித்துப் பேசினர். கமிஷனர் அலவன்ஸ் கிடைக்கும், தொழிலாளர்களை சம்பளம் வாங்கச் சொல்லுங்கள் என்று கேட்டுக்கொண்டார். கமிஷனரின் உறுதிமொழியின் பேரில் தொழிலாளர்கள் போராட்டத்தைப் பின்வாங்கினர்.

### விவசாய சங்க அமைப்புக் கூட்டம்

அரியலூரில் செப். 16ல் விவசாய சங்க அமைப்புக் கூட்டம் திரு. ஆர். செல்லமுத்து தலைமையில் நடைபெற்றது. திரு பி கோவிந்தராசன் தலைவராகவும், ஆர் கிருஷ்ணமூர்த்தி உப தலைவராகவும், ஆர். ராமசாமி காரியதரிசியாகவும், ஏ. ராமசாமி உதவி காரியதரிசியாகவும் எஸ் நாராயணசாமி பொருளாளராகவும் மற்றும் 12 பேர்கொண்ட நிர்வாகக் கமிட்டியும் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டது.

## மதுரையில் தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் சம்மேளன முதல் மகாநாடு

## ஒப்பந்தத்தை மின்சார போர்டு மீறுகிறது

### தினக் கூலி பெறுவோருக்கு அநீதி விளைவிப்பதா?

### தலைவர் வி. ஜி. ராவ் பேருரை

மதுரை, செப். 24—

தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் சம்மேளனத்தின் முதலாவது மகாநாடு மதுரையில் 17, 18 தேதிகளில் நடந்தது. இச் சம்மேளனத்துடன் இணைக்கப்பட்ட எல்லா தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகளும் முனிசிபல் மின்சாரத் தொழிலாளரும் தனிப்பட்டவரிடம் வேலை செய்யும் மின்சாரத் தொழிலாளரும் மகாநாட்டில் கலந்துகொண்டனர்.

துவக்கத்தில் ஊர்வலம் நடந்தது. அதில் 1000க்கு மேற்பட்ட தொழிலாளர் கலந்துகொண்டனர்.

தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் சம்மேளனத்தின் கொடியைத் திரு பல்லா கவுடர் ஏற்றி வைத்தார்.

### தலைமை உரை

மகாநாட்டுக்குத் தலைமை வகித்த தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் சம்மேளனத் தலைவர் தோழர் வி. ஜி. ராவ் தமது உரையில் குறிப்பிட்டதாவது:—

நாம் அனைவரும் ஒன்றுபட்டு ஒரே சங்கத்தின் கீழ் வந்தது பெரும் வெற்றியாகும். என். எம். ஆர். அதாவது தினக்கூலி பெறுவோரும் கணக்காயரும் தொழிலாளரும் ஒன்று திரண்டு போராட முன்வந்திருப்பது பாராட்டக்கூடியதாகும்.

### ஒப்பந்தம் மீறப்படுகிறது

3-9-59ல் நமக்கும் சென்னை மின்சார போர்டுக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அந்த ஒப்பந்தத்தை அதிகாரிகள் மீறி நடக்கிறார்கள்.

முதலாவதாக 20,000 என். எம். ஆர். தொழிலாளர்களை அதாவது தினக்கூலி பெறுபவர்களை ஒரு வருஷத்திற்குள் நிரந்தரமாக்குவதாக வாக்களிக்கப்பட்டது. அவ்வாக்கு நிறைவேற்றப்படவில்லை. மாறாக அத்தொழிலாளிகளில் ஏராளமான பேர்களுக்கு வேலையில்லாமல் செய்திருக்கிறார்கள்.

2 அல்லது 3 வருஷ சர்வீசில் உள்ள கணக்காயர்களை நிரந்தரமாக்கவேண்டுமென்பது நமது கோரிக்கை. ஆனால் 500 கணக்காயர்களை நீக்கி, புதிதாக 500 பேரை சேர்த்திருக்கிறார்கள்.

16வது முக்கூட்டு மகாநாட்டு முடிவுகளை அமுல் நடத்துவதும் நமது கோரிக்கையாகும்.

சர்க்காரிடமிருந்து 5¼ சதவீத வட்டியும் கடன் வாங்குவதற்குப் பதில் பொதுமக்களிடமிருந்து 4½ சதவீத வட்டி விகிதத்தில் மின்சார போர்டு கடன் வாங்கும்படி கூறுகிறோம். இது தவறும். பொதுமக்களிடமிருந்து குறைந்த வட்டியில் கடன் வாங்கினால் தமிழ் நாட்டிலுள்ள 40 ஆயிரம் மின்சாரத் தொழிலாளருக்கு 6 மாத போனஸ் கொடுக்க முடியும்.

இந்த கோரிக்கைகளைப் பெற நம்மிடை ஒற்றுமை அவசியம்.

காலை நிகழ்ச்சியில் திரு. க. அன்பழகன் எம். எல். ஏ., திரு கே. சட்டநாத கரையாளர் எம். எல். ஏ. பேசினார்கள்.

திரு. வை. சங்கரனும் பேசினார்.

என். எம். ஆர். தொழிலாளர்களை நிரந்தரமாக்க வேண்டுமென்று திரு. ஆர். ரெங்கசாமி வற்புறுத்தினார்.

திருமதி பி. கே. ஆர். லட்சுமி காந்தம் அம்மாளும் பேசினார். வருங்காலம் உழைப்பவனுக்குத்தான் என்று வற்புறுத்தினர்.

### ஆண்டறிக்கை

ஆண்டறிக்கையை திரு. எஸ். சி. கிருஷ்ணன் (சம்மேளனப் பொதுச்செயலாளர்) வாசித்தார். இவர் தமது ஆண்டறிக்கையின் போது "தமிழ் நாட்டிலுள்ள 18 திட்டங்களில் பணிபுரியும் மின்சார ஊழியர்களும் 22 பல்வேறுபட்ட சங்கங்களும் ஒன்றுபட்டு இன்று தமிழ் நாடு சம்மேளனம் என கடந்த ஒரு வருடமாக மாபெரும் இயக்கமாக இயங்கி வருகிறது மின்சார போர்டுக்கும், சம்மேளனத்திற்கும் ஒப்பந்தம் ஏற்பட்டு 6 மாதங்களாகியும் இன்னும் ஒப்புக்கொள்ளப்பட்டவை ஒன்றும் நடைபெறவில்லை அதற்கு மாறாக சம்மேளனத்தின் ஒன்றுபட்ட சக்தியைக் குலைக்க போர்டு பலவிதமான செயல்களைச் செய்கிறது அதற்கு இடம் கொடுக்காமல் தொழிலாளர்கள் ஒற்றுமையாக சம்மேளனத்தைக் கட்டிக் காக்க வேண்டும்.

போர்டு அதிகாரிகளின் இடைஞ்சல்களால் பல திட்டங்கள் காலதாமதமானாலும் ஆகலாம். நாம் போர்டிலிருந்துவரும் பற்பல தாக்குதல்களையும் பொறுத்துத் தொடர்ந்து போராட வேண்டும்" என்று ஆண்டறிக்கையை சமர்ப்பித்துப் பேசினர்.

### கே. சட்டநாதனின் திறப்பு விழா உரை

மகாநாட்டைத் திறந்து வைத்து திரு. கே. சட்டநாதக் கரையாளர் பி.ஏ., எம்.எல்.ஏ. பேசுகையில், "இதர தொழிலை விட மூலதனம் அதிகமுள்ளதும், எல்லாத் தொழில்களுக்கும் மூலகாரணமானதுமான மின்சாரத் தொழில் பாதிக்கப்பட்டால் நாட்டில் எவ்வித திட்டமும் நிறைவேறாது. மின்சாரத் தொழிலாளர்களின் வாழ்வும், பொது மக்களின் வாழ்வும் ஒன்றோடொன்று பின்னிக்கிடக்கிறது. முன்பு சர்க்காரிடத்திலிருந்து மின்சாரத் தொழில் தனிப்பட்ட மின்சார போர்டு என்ற இலாகாவிடத்தில் சேர்ந்துவிட்டதால் அதிலுள்ள குறைகளை ஆழமாக சட்டசபையில் கிளப்ப முடியவில்லை. கிளப்பினாலும் அதுபற்றி சீர்திருத்த சர்க்காரால் செய்வதற்கு ஒன்றுமில்லை என்று கூறப்படுகிறது, மின்சார போர்டின் முழு உரிமையும் போர்டின் குழுவுக்கே உரித்தாகிவிட்டது. மின்சார போர்டு இருக்க வேண்டியதுதான். ஆனால் இதுவரை பொது மக்களுக்கோ, தொழிலாளர்களுக்கோ எவ்வித நன்மையும் செய்யவில்லை. அதுதான் வருத்தத்துக்குரியதாகும். மின்சார போர்டு ஏதேச்சதிகாரமாக தன் விஷ்டம்போல் நடப்பதை நாம் எதிர்த்துப் போராட வேண்டும். இதற்கு பொது மக்களின் ஆதரவைத் திரட்ட வேண்டியது தொழிலாளர்களின் கடமையாகும். சோஷலிஸம் பேசி வரும் காலத்தில் தொழிலாளர் ஸ்தாபன ரீதியாக ஒன்று சேர்ந்து தங்கள் உரிமைக்காகப் போராட உரிமையுண்டு. இதைத் தடுத்து நிறுத்தக்கூடாது. அப்படி முயற்சித்தால் அது ஜனநாயகத்துக்கு விரோதமாகும். தொழிற்சங்க வளர்ச்சியைக் கண்டு தனியார் துறையிலும் சர்க்கார் துறையிலும் இருப்பவர்கள் பயப்படுகிறார்கள். இனி இப்போதிருக்கும் காலம் நீடிக்காது. சீக்கிரமே உழைப்பாளிகளின் வாழ்வு வளமடையும் காலம் வரத்தான்போகிறது. சந்தேகமில்லை. சர்க்காரின் லாபத்தையும், நன்மையையும் கருதியே சர்க்கார் செயல்படுகிறது. மக்களின் நல்வாழ்வையோ, நாட்டின் முன்னேற்றத்தையோ கருதுவதில்லை. தென்காசி பகுதியில் குடிதண்ணீர் நெருக்கடி மின்சார வசதி செய்யாததால் தடைபடுகிறது. இதற்குக் காரணம் பாதென்றால் பொருளாதார நெருக்கடி அதாவது இலாபமில்லை (uneconomic) என்று பதில் கூறுகிறார்கள்.

சம்மேளனத்திற்கும், மின்சார போர்டுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தம் ஒரு மாபெரும் வெற்றி என்று மகிழ்ந்தேன். ஆனால் இதுவரை அவ்வொப்பந்தப்படி போர்டு நடக்கவில்லை என்று கேட்டவுடன் வருத்தமுண்டாகிறது. தொழிலாளர்களின் ஒற்றுமையைக் குலைக்கத்தான் இவ்வாறு செய்துவருகிறார்கள் என்பதாகத் தெரிகிறது. ஆகையால் தொழிலாளர்கள் கடைசிவரை ஒற்றுமையாக இருக்க வேண்டும்.

மின்சார போர்டுக்கும் சர்க்காருக்கும் தொடர்பு உண்டு. மின்சார போர்டு தவறான வழியிலே போனால் அதைக் கண்டித்து ஒழுங்குபடுத்துவது சர்க்காரின் கடமை. இதைத் தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப் போராடினால் தான் போர்டு இடம் கொடுக்கும்.

தொழிலாளர்கள் தொழிற்சங்கத்தில் ஈடுபட்டு உழைத்தால் பழிவாங்கப்படுகிறார்கள். இதை எதிர்த்து நாம் போராடவேண்டும். சோஷலிஸ வாழ்வு கொண்டுவரவும், ஜனநாயகம் தழைக்கவும் சர்க்கார் நினைக்குமானால் வளர்ந்துவரும் தொழிற்சங்க இயக்கத்தைத் தடுத்து அதை உடைக்கக்கூடாது

தமிழ்நாட்டில் அணு மின் உலை அமைக்கப்போவதாக இல்லை. "ஒருவேளை 3-வது 5 ஆண்டு திட்டத்தில் கொண்டுவந்தால் வரலாம்" என்று கூறி முடித்தார்.

### திரு. க. அன்பழகன்

அடுத்து திரு. க. அன்பழகன் எம். எல். ஏ. (தி.மு.க.) பேசுகையில் தொழிலாளர்களை அமைத்து அவர்களது உரிமைகளுக்காகப் போராட யார் முன்நிற்கிறார்களோ அவர்களை நாம் பாராட்டவேண்டும். அவர் எக்கட்சியாக இருந்தாலும் சரி. ஒப்பந்தத்தில் என். எம். ஆர். தொழிலாளர்களை நிரந்தரமாக்குவேன் என வாக்குறுதியளித்துவிட்டு இப்போது மறக்கப்படுகிறது, தாமதமாகிறது. இது துரோகம். அதுவும் காமராஜரின் துரோகமாகும். இச்சம்மேளனத்திற்கு சகல அரசியல் கட்சிகளும் ஆதரவு தருவதைக் கண்டு பல சதிகள் செய்து ஒற்றுமையைக் குலைக்க நினைக்கிறது போர்டு அதற்கு இடம் கொடுக்கக்கூடாது மற்றைய ராஜ்யங்களைவிட தமிழ்நாட்டில் மின்சார வசதி குறைவு. மின்சார வசதி அதிகம் பெற்றால் தமிழ்நாடு தானாக சகல துறைகளிலும் முன்னேறும் தமிழ் நாட்டிற்கு அணு மின்சாரத் திட்டம் வருவது சந்தேகம்தான். ஒருவேளை 3வது திட்டத்தில் வரலாம் இதிலும் வடக்கு தெற்கு பாகுபாடு காட்டி பம்பாயில் அமைக்கப் போகிறார்கள்" என்று கூறி முடித்தார்.

### தீர்மானங்கள்

இச்சம்மேளன நிர்வாகி திரு பி. கோபாலன் நியாயமற்ற முறையில் வேலையிலிருந்து நீக்கப்பட்டதைக் கண்டிக்கும் எக்ஸ்பிரஸ் தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்தும் ஒப்பந்தப்படி மின்சார போர்டு நிர்வாகத்தைப்பற்றி நிர்வாக அதிகாரிகளுடன் கலந்துபேச உரிமையைவற்புறுத்தியும், மின்சாரத் தொழிலாளர் அனைவருக்கும் பிராவிடன்ட் பண்ட் வசதியும் ஒப்புத்தொகையும் கொடுக்க வேண்டுமென்றும், புது ஒழுங்குவிதிகளைக் கடைபிடிக்க வேண்டுமென்றும் தமிழ் நாட்டில் அணுமின்சார நிலையம் ஒன்று அமைக்க வேண்டுமென்றும், மின்சார தொழிலாளருக்கு வீடு கட்டிக்கொடுக்கும் கூட்டுறவு சங்கம் அமைக்கும் உரிமை வழங்கவேண்டுமென்றும் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் தொழிற்சங்க ஊழியர்களைப்பழிவாங்கும் எண்ணத்தோடு ஊர் ஊராக மாற்றி அலைக்கழிப்பது கூடாதென்றும் உட்பிரியார் தேயிலைத் தோட்டத் தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

இத்தீர்மானங்களை ஆதரித்து தோழர் எஸ். சி கிருஷ்ணன், ஜானகிராம், மாணிக்கம், மகாதேவன், எஸ். ஆர். நீலகண்டன், சி. ஏ கணபதி, அனந்தராமன், கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பேசினர்.

இறுதியில் 'அழியா இளமை என்ற நாடகம் மதுரை நகரசபைத் தலைவர் திரு. எஸ். தேவசகாயம் தலைமையில் நடந்தது.

### புது நிர்வாகிகள்

தலைவர்: வி. ஜி. ராவ் பார்-அட்-லா. உப தலைவர்கள்: கே. சுப்ரமணியம் பி ஏ, பி எஸ் சி, ஏ கணபதி. எம். ஏ மாலிக், எம். கே. மாணிக்கம், எஸ் ராமசாமி, வி பொன்னையா. பொதுக் காரியதரிசி: எஸ். சி. கிருஷ்ணன் பி. ஏ., கூட்டுக் காரியதரிசிகள்: பி இ எபான் ஆர் சவரிராசன், எஸ். ராமசாமி, எஸ். ஆர். நீலகண்டன், எம். கல்யாணசுந்தரம், டி குப்புரங்கம் பொக்கிஷதார்: ஆர். ராமனுஜன்.

தமிழ்நாடு

## கார்ப்பொரேஷன், முனிசிபல், பஞ்சாயத்துத் தொழிலாளர் பிரதிநிதிகள் கூட்டம்

### 3வது மகாநாடு தஞ்சாவூரில் டிசம்பரில் நடைபெறும்

தஞ்சாவூர், செப். 22—

தமிழ்நாடு கார்ப்பொரேஷன், முனிசிபல், பஞ்சாயத்துத் தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் தஞ்சாவூர் சென்கொண்டார் சத்திரத்தில் 20-ந் தேதி நடைபெற்றது. அக்கூட்டத்திற்கு தஞ்சாவூர் நகரசுத்தித் தொழிலாளர் சங்கக் காரியதரிசி தோழர் எம். எஸ். கணபதி தலைமை வகித்தார். எல்லா ஜில்லாக்களிலிருந்தும் 45 பிரதிநிதிகள் கலந்துகொண்டார்கள் 10 பெண் பிரதிநிதிகளும் கலந்துகொண்டார்கள்.

தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் காரியதரிசி தோழர் கே எம். சுந்தரம் கலந்துகொண்டு தொழில் பிரச்சினைகள் பற்றியும், ஸ்தாபனம் பற்றியும் ரிப்போர்ட் செய்தார். அந்த ரிப்போர்ட்டின் பேரில் பிரதிநிதிகள் விவாதம் நடத்தினர்கள்.

முடிவுகள்

திருச்சி மகாநாட்டில் நியமிக்கப்பட்ட உபகமிட்டி ஜில்லாக்களிலுள்ள சங்கங்களின் நிர்வாக கமிட்டி, ஜெனரல்பாடிக்கூட்டங்களில் கலந்துகொண்ட பிறகு ரிப்போர்ட் சமர்ப்பிப்பார்கள் அந்த ரிப்போர்ட்டுகளைப் பரிசீலனை செய்ய உபகமிட்டி நவம்பர் 14, 15 தேதிகளில் ஈரோட்டில் கூடும். அக்கூட்டம் டிசம்பர் மாதம் இரண்டாம் வாரத்தில் தஞ்சாவூரில் தமிழ்நாடு கார்ப்பொரேஷன், முனிசிபல், பஞ்சாயத்துத் தொழிலாளர் 3வது மகாநாட்டை நடத்துவதற்குத் திட்டமிடும் என்று முடிவு செய்யப்பட்டது

### தீர்மானங்கள்

அரசியல் கைதிகள் விடுதலை பற்றியும் சோவியத் விஞ்ஞானிகள் சந்திரனை எட்டிப் பிடித்த அபார சாதனையைப் பாராட்டியும் உணவு விலையைக் கட்டுப்படுத்த அரசாங்கம் உடனடி நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் இல்லாவிட்டால் நேரடி நடவடிக்கையில் இறங்க நேரிடுமென்று எச்சரிக்கும் சீன-இந்திய எல்லைத் தகராறை இந்தியாவிலுள்ள பிற்போக்கு அரசியல் வாதிகள் பிரயோஜனப்படுத்தி இந்திய-சீன நட்பைக் கெடுக்க முயற்சிப்பதைக் கண்டித்தும் இரு அரசுத் தலைவர்களும் சுமுகமாகத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று கோரியும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### பொதுக்கூட்டம்

மாலையில் மாபெரும் ஊர்வலத்திற்குப் பிறகு காந்தி ஸ்டேடியத்தில் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் கே. எம். சுந்தரம் அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தும் தீர்மானங்களை விளக்கிப் பேசினர். பிறகு அனந்தநம்பியார், எஸ். ஏ. தங்கராஜ், எஸ். பி. ஆண்டி, எஸ். எஸ். மாணிக்கம், நாகன், எம். எஸ். கணபதி, வெங்கடேஸ்வரலு, வி. சௌரிமுத்து ஆகியோர் பேசினர்கள்.

### கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவாளர் சங்க அமைப்பு

சாத்தன்குளம், செப். 25—

சமீபத்தில் சாத்தன் குளத்தில் கம்யூனிஸ்ட் ஆதரவாளர்கள் சங்கம் அமைக்கப்பட்டது.

கே. ஏ. குற்றாலலிங்கம் தலைவராகவும் ஏ. சாமிபாத் தேவர் துணைத் தலைவராகவும் எஸ். முத்துசாமி செயலாளராகவும் சங்கப்பு துணைச் செயலாளராகவும் எஸ். பி. சவரிமுத்து பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## கம்யூனிஸ்ட் கட்சிகளின் வரலாறு நூல்வடிவில் தயாராகிறது

### புகாரெஸ்ட் மாநாடு விபரம்

புதுடில்லி, செப். 20—

மார்க்ஸிஸம்-லெனினிசம் இன்ஸ்டியூட்டுகள், கம்யூனிஸ்ட் கட்சிகளின் வரலாறுகள் தயாரிக்கும் கமிஷன்கள், இன்ஸ்டியூட்டுகள் ஆகியவற்றைச் சேர்ந்த பிரதிநிதிகளின் 5-வது சர்வதேச மாநாடு சென்ற ஆகஸ்ட் கடைசி வாரத்தில் தொடங்கி இம்மாதம் (செப்) 3-ம் தேதியன்று முடிவடைந்தது.

அல்பேனியா, ஆஸ்திரியா, பிரிட்டன், பெல்ஜியம், பல்கேரியா, ஹங்கேரி, வியட்னாம் ஜனநாயகக் குடியரசு, ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு, டென்மார்க், இந்தியா, இந்தோனேஷியா, இத்தாலி, கனடா, சீன மக்கள் குடியரசு, மங்கோலிய மக்கள் குடியரசு, கொரிய மக்கள் ஜனநாயகக் குடியரசு, நார்வே, போலந்து, ருமேனியா, சோவியத் யூனியன், ஸ்வீடன், பிரான்ஸ், ஜெர்மன் சமஷ்டிக் குடியரசு, செக்கோஸ்லோவாகிய நாடுகளிலும் கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளின் பிரதிநிதிகளும் உலக மார்க்ஸிஸ்ட் சஞ்சிகையின் (World Marxist Review) பிரதிநிதியும் இதில் கலந்துகொண்டனர்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர்கள் எஸ் ஏ டாங்கேயும், எஸ். வி. காட்டேயும் கலந்துகொண்டனர்.

சர்வதேசத் தொழிலாளர், கம்யூனிஸ்ட் இயக்க வரலாறு குறித்து விபரமான நூலொன்றைத் தயாரிப்பதுபற்றி கமிஷனின் சிபாரிசுகளை மாநாடு ஏற்றுக்கொண்டது

கட்சி வரலாறுகளைத் தொகுப்பதில் ஈடுபட்டிருக்கும் கமிஷன்களும், இன்ஸ்டியூட்டுகளும் செயல்பட வேண்டிய விதம் குறித்து மாநாடு தீர்மானம் செய்துள்ளது. பல்வேறு நாடுகளிலுள்ள கட்சி வரலாற்றாசிரியர்களிடையே வளர்ந்துவரும் ஒத்துழைப்பு, கம்யூனிஸ்ட் கட்சிகளின் வரலாறு சம்பந்தமாக எழும் பல்வேறு பிரச்சினைகள் முதலியன பற்றியும் விரிவாக விவாதித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

அடுத்த மாநாடு 1961 ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் நடைபெறும்.

## பீகாரில் எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்சாலை

### யந்திரங்களை சோவியத் யூனியன் சப்ளை செய்யும்

புதுடில்லி, செப். 25—

பீகாரில் பாராவுனி என்ற ஊரில் ஆரம்பிக்கப் போகிற எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்சாலைக்கு 15 கோடி ரூபாய்க்கு மேல் பெறுமானமுள்ள யந்திர சாதனங்களைச் சோவியத் யூனியன் சப்ளை செய்யப்போகிறது. இதை யொட்டி இந்திய சர்க்காருக்கும் சோவியத் யூனியனுக்குமிடையில் ஓர் ஒப்பந்தம் இம்மாத இறுதிக்கு முன்பு கையொப்பமாகும்.

சோவியத்துக்கு 15 கோடி ரூபாயும் தவணைகளில் திருப்பிக் கொடுக்கப்படும். அக்கடனுக்கு 2½ சதவீத வட்டியே.

### 20 லட்சம் டன்

அஸ்ஸாமிலுள்ள எண்ணெய் ஊற்றுக்களிலிருந்து குழாய்கள் மூலம் எண்ணெய் இந்தச் சுத்திகரிப்பு தொழிற்சாலைக்கு கிடைக்கும். இந்த தொழிற்சாலையில் 20 லட்சம் டன் எண்ணெய் சுத்திகரிக்கப்பட்டு, பெட்ரோலும் ஹாட்ரிகேட்டிங் எண்ணெயும் டீசல் எண்ணெய் முதலனவும் தயாரிக்கப்படும்.

1962-ம் ஆண்டில் இப்புதிய தொழிற்சாலை இயங்க ஆரம்பித்து விடும்.

## உயர்நிலைக் கல்விப் பிரச்சினைகள்

### தேர்ச்சிக்கு 33 சதவீத மார்க் போதும்

### டில்லி மகாநாட்டின் சிபாரிசு

புதுடில்லி, செப் 26—

உயர்நிலைக்கல்வி (செகண்டரி) போர்டுகளின்காரியதரிசிகள், SSLC (ஸ்கூல் பைனல்) பரீட்சைகளை நடத்தும் சர்வகலாசாலைகளின் பிரதிநிதிகள் மகாநாடு சில முக்கிய சிபாரிசுகள் செய்துள்ளது. செகண்டரி ஸ்கூல் பரீட்சையில் தேர்ச்சி பெறுதவர் தொகை அதிகரிப்பதைத் தடுப்பது, பரீட்சை முறை சீர்திருத்தம், உயர்நிலைக் கல்வி மட்டத்தின் கல்வித் தரத்தை உயர்த்தல் இவை சம்பந்தப்பட்டவையே அச்சிபாரிசுகள்.

பாடங்கள் அதிகமாக இருப்பதால் பாடங்களின் பளு குறைக்கப்படவேண்டுமென்றும் எல்லா பாடங்களிலும் 33 சதவீதம் மார்க்குகள் பெற்றால் தேர்ச்சி பெறலாமென்றும் அம்மகாநாடு சிபாரிசு செய்துள்ளது.

## நெல்லை மாவட்டச் செய்திகள்

### தூத்துக்குடி

இந்நகரில் தியாகிகள் சங்கத்தின் பெயரால் விநோபாஜி பிறந்த நாள், பாரதி விழா நடைபெற்றன. பல காங்கிரஸ் பிரமுகர்கள் சம்பந்தமின்றி கம்யூனிஸ்டுகளையும் தி. மு. க. வினரையும் நிந்தித்தனர். வ. உ. சி. கல்லூரி பேராசிரியர் பெரியதிருவடி இவ்விதம் முறையின்றி காங்கிரஸ் வாதிகள் பேசியதைக் கண்டித்தார்.

### கம்யூனிஸ்ட் கட்சி கூட்டம்

30-8-59-ல் தூத்துக்குடியில் பொதுக்கூட்டம் நடந்தது. 3000 பேர் கலந்துகொண்டனர். பயில்வான் அருணாசலம் தலைமைவகித்தார். டி. கே. சுவாமிதாஸ், சி. தங்கம்மாள் நகரசபையில் காங்கிரஸ் கவுன்சிலர்களின் தவறான போக்கு, உணவுப்பொருள் விலையேற்றம் குறித்து பேசினார்கள்

தோழர் முருகானந்தம் பேசுகையில் கேரள முன்னாள் முதல் அமைச்சர் இ. எம். எஸ். செல்லும் இடங்களில் எல்லாம் சிறப்பாக வரவேற்கப்பட்டு, பரிசுகளும் பணமுடிப்புகளும் வழங்கப்படுகின்றன வென்றும் ஆனால் பதவி இழந்த எந்த காங்கிரஸ் மந்திரிக்காவது இந்த மதிப்பு ஏற்பட்டதுண்டாவென்றும் கேட்டார்.

பருத்தல்காரர்களைச் சிறையில் தள்ள நேருஜி ஏன் தயங்க வேண்டுமென்று கேட்டார் தோழர் கே. டி. ராஜு.

### சுதந்திரா கட்சிக் கிளை

தூத்துக்குடியில் சுதந்திரா கட்சிக் கிளை அமைக்கப்பட்டுள்ளது. திரு. எம். வி. எஸ். கதிர்வேல் நாடார் (பிரபல தோட்ட முதலாளி) தலைவர்; திரு. எம் வெங்கடகிருஷ்ணன் (முன்னாள் காங்கிரஸ் தலைவர்) செயலாளர்; திரு. ஏ. என். கே. டி. இராஜேந்திரன் (ஜவுளிக்கடை முதலாளி) பொருளாளர்; மற்றும் பல வியாபாரிகளும், நிலப்பிரபுக்களும் இதில் சேர்ந்துள்ளனர்.

தமிழ்நாடு சினிமா ரசிகர்கள் சங்கக் கூட்டம் திரு. டி. ஆசீர் தலைமையில் நடந்தது. திரு. ஏ. வி. அருணாசலம் தலைவராகவும், திரு. டி. ஆசீர் செயலாளராகவும், திரு. வானமாமலை பெருமாள் பொருளாளராகவும், அட்வகேட் வைகுண்டம் ஆலோசகராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### தூத்துக்குடி ஸ்பின்னிங் மில் போராட்டம்

#### இன்னும் சமரச முயற்சி நடக்கிறது

தூத்துக்குடி, செப். 17—

16-9-59-ல் தூத்துக்குடி ஸ்பின்னிங் மில்லின் வேலை நிறுத்தம் பாலட் எடுக்கப்பட்டது. வேலை நிறுத்தத்தை ஆதரித்து 921 ஓட்டுகள் சிவப்பு பெட்டியில் போடப்பட்டிருந்தது. வேலை நிறுத்தம் வேண்டாமென்று 6 ஓட்டுகள் வெள்ளைப் பெட்டியில் போடப்பட்டிருந்தது.

திரு. ஏ. பி. சி. வீரபாகு எம். எல். ஏ. பேசுகையில் சமரச முயற்சி இன்னும் முடியவில்லையென்று அறிவித்தார்.

தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்து கம்யூனிஸ்ட் கட்சி உள்பட சகல கட்சிகளின் கமிட்டி ஒன்று நிறுவப்பட்டிருக்கிறது.

### ஸ்ரீவைகுண்டம்

ஸ்ரீவைகுண்டம் தாலூகா ஆரம்ப ஆசிரியர் யூனியன் நிர்வாகக் கமிட்டி கூட்டம் திரு. டி. எஸ். சாமுவேல் தலைமையில் நடந்தது. உயர்தர ஆசிரியர் சம்பள தினத்தைக் கொண்டாட முடிவு செய்யப்பட்டது.

### சிவந்திபுரம்

நேற்று ஆலடியூர் பஞ்சாயத்து தேர்தல் நடந்தது. கம்யூனிஸ்ட் ஆதரவாளரான கூட்டணி அபேட்சகர்கள் 6 பேர் (மிக்கேல் நாடார் உள்பட) வெற்றி பெற்றனர்.

ஜனநாயக சுயேச்சையாளர் திரு. பால் நாடாரும் காங்கிரஸ் கூட்டணி அபேட்சகர்கள் இருவரும் சுயேச்சையாளர்கள் இருவரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### சிவந்திபுரம் பஞ்சாயத்து

விலைவாசிகளைக் கட்டுப்படுத்தும்படியும் 500 குடும்பங்களுக்கு ஒரு நியாயவிலைக் கடை திறக்க வேண்டுமென்றும் மேற்குவங்க சர்க்காரின் அடக்குமுறையைக் கண்டித்தும் தீர்மானங்கள் சிவந்திபுரம் பஞ்சாயத்து கூட்டத்தில் நிறைவேறின.

### பத்தமடை

சில நாட்களுக்கு முன்பு பத்தமடை பஞ்சாயத்து கூட்டம் நடந்து கொண்டிருக்கையில் 1000 மக்கள் திரண்டு வந்து, புது வரி போட வேண்டாமென்று வற்புறுத்தி ஆர்ப்பாட்டம் நடத்தினர். 2 மணி நேரம் மக்கள் உறுதியாக இருந்து ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தனர். ஏற்கனவே வரி கட்ட முடியாமல் மக்கள் கஷ்டப்படுவதையும் விலைவாசி உயர்வால் கஷ்டம் மேலும் அதிகரித்திருப்பதையும் கம்யூனிஸ்ட் உறுப்பினர் எம். ஏ. கனி எடுத்துரைத்தார். முடிவில் தலைவர் வந்து, புதுவரியை வாபஸ்செய்ய ஆவன செய்வதாகத் தெரிவித்தார்.

அதன்படி 5-9-59-ல் பஞ்சாயத்து கூட்டம் நடந்து அதில் புதுவரி கூடாதென்றும் பழைய முறைப்படியே வரி விதிப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது. மக்கள் கூடி, மகிழ்ச்சி தெரிவித்தனர். அன்று எல்லா வியாபாரிகளும் தங்கள் கடைகளை அடைத்து மக்களுடன் சேர்ந்து வெற்றி கொண்டாடினர்.

### வில்லிசேரி

5-9-59-ல் வில்லிசேரி கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை கூட்டம் கே. கிருஷ்ணசாமி தலைமையில் நடந்தது.

புத்தாண்டிற்கு தோழர் கா. இராமசுப்பு (வில்லி பஞ்சாயத்து போர்டு உறுப்பினர்) ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### கோவில்பட்டி

5-9-59-ல் கோவில்பட்டி சமுதாயநலத் திட்ட அபிவிருத்திக் குழுவின் கூட்டம் நடந்தது. கீழ்க்கண்ட வேலைகளை நிறைவேற்ற அங்கீகாரம் அளிக்கப்பட்டது. கடலையிலிருந்து எட்டயபுரம் (சின்ன மலைக்குன்று வழியாக) சாலை அமைத்தல்; செலவு ரூ. 10,000; ஆவல்நத்தத்திலிருந்து சுந்தரலிங்கபுரத்திற்கு சாலை அமைத்தல்; செலவு ரூ. 2600; துரைசாமிபுரம் பள்ளிக்கூடத்திற்கு முன்பு ஒரு சிறு பாலம் அமைத்தல்; செலவு ரூ 400.

### நடுவீரப்பட்டு

கம்யூனிஸ்ட் கட்சியின் நடுவீரப்பட்டு கிளையின் சார்பில் கூட்டம் நடந்தது. நெசவாளருக்கு கூலி உயர்வை வற்புறுத்தியும் கேரளத்தில் மத்திய சர்க்காரின் தலையீட்டைக் கண்டித்தும் மேற்கு வங்க உணவுப் போராட்டத்தை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

### சிவகிரி

சிவகிரியில் கொத்தாடப்பட்டியின் பொதுமடத்தின் முன்பாக செப். 18ல் செல்லையா சேர்வை தலைமையில் எஸ். எம். கார்க்கி குழுவினரால் வில்லுப்பாட்டு நிகழ்ச்சி நடந்தது.

### முக்காணி

செப். 13ல் முக்காணி கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைக் கூட்டம் சு. மாரி தலைமையில் நடந்தது. எக்ஸ்பிரஸ் தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்தும் மேற்குவங்க சர்க்காரின் அடக்குமுறையைக் கண்டித்தும் நியாய விலை கடை திறக்கும்படிக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேறின.

### திருச்செந்தூரில் உணவு ஆர்ப்பாட்டம்

திருச்செந்தூர், செப். 20—

30-8-59-ல் கம்யூனிஸ்ட் கட்சியின திருச்செந்தூர் தாலூகா கமிட்டி சார்பில் ஒரு ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடந்தது. படி அரிசி 12 அணாவுக்குக் கொடுக்க வேண்டுமென்றும் 500 குடும்பத்திற்கு ஒரு நியாய விலை கடை திறக்க வேண்டுமென்றும் விலையேற்றத்தைத் தடுக்க வேண்டுமென்றும் கோஷமிட்டுக்கொண்டு ஊர்வலம் சென்றது. மாலையில் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர்கள் செங்கோட்டை எம காமாட்சி, எஸ். வெள்ளைச்சாமி, ஏ. பி. மணவாளராயன், குலசை இளவரசு முதலியவர்கள் பேசினர்.

சென்னை காங்கிரஸ் சர்க்காரின் உணவு கொள்கை சாதாரண மக்கள் கழுத்தைப் புறக்கணிக்கிற தென்று கண்டனத் தீர்மானம் ஒன்று நிறைவேறியது.

# 3வது திட்ட முதலீட்டில் பெரும் பகுதியை முதலாளிகளிடம் கொடுக்க வேண்டுமாம்

## முதலாளிகள் போக்கு பற்றி நேரு, சி. சுப்ரமணியம் கண்டனம்

### அ. இ. கா. க.யில் 3வது திட்ட விவாதம்

நவீன்நகர், செப். 27— நேற்று அ. இ. கா. க.வில் பிரதம மந்திரி நேரு 3-வது திட்ட விவாதத்தைத் துவக்கிப் பேசினர்.

இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா சுட்டுக் கொல்லப்பட்டதை நேரு பிரஸ்தாபித்துச் சொன்னதாவது: "பண்டாரநாயகா நீண்டகால நண்பர். அவர் மறைந்தது பற்றி எனக்கு அதிக வருத்தம். பொருளாதார பாண்டுங் மகாநாடு கூட்டுவது பற்றி ஆலோசிக்க அவரை கொழும்புவில் சந்திக்க இருந்தேன். ஆனல் பண்டாரநாயகா மறைந்துவிட்டார். இலங்கையிலோ அல்லது இந்தியாவிலோ என்ன நடந்தபோதிலும் உலகின் வேலை நீடித்து நடக்கவேவேண்டும்.

**ராஜாஜி கொள்கை**

ராஜாஜி தமது சுதந்திர கட்சியில் பலதரப்பட்டவர்களை சேர்த்துள்ளார். பழங்கால முறைகளை அனுமதிக்க வேண்டுமென்றே ராஜாஜி விரும்புகிறார். அதாவது பெரும் முதலாளிகள் பெரும் தொழிலதிபர்கள் தங்கள் இஷ்டப்படி செயலாற்ற அனுமதிக்கப்பட வேண்டுமென்று ராஜாஜி வற்புறுத்துகிறார். இது பழங்கால முறை. இந்த முறையால் வறுமை பிரச்சினைக்கு எப்படி பரிகாரம் காண முடியுமென்று எனக்குத் தெரியவில்லை.

3வது திட்டத்தில் ரூ 10 ஆயிரம் கோடி முதலீடு செய்ய வேண்டுமென்பதிலும் கனரகத் தொழில்களுக்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டுமென்பதிலும் காங்கிரஸிற்கும் பெரும் முதலாளிகளுக்கும் அபிப்பிராயபேதமில்லை. பத்து ஆயிரம் கோடியில் பெரும் பகுதியைத் தங்களிடம் கொடுக்க வேண்டுமென்று பெரிய முதலாளிகள் கேட்கின்றனர். இது பற்றியே எங்களுக்கும் அவர்களுக்கும் கருத்து வேற்றுமை உண்டு. இதுவே முக்கிய வித்தியாசம்.

**வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம்**

வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் இவற்றை ஒழிக்கப் போர் தொடுக்க மக்கள் ஒன்று சேரவேண்டும். வெறும் கோஷங்கள் பலன்தரா. கடும் உழைப்பும் விஞ்ஞானம், தொழில் நுட்பம் இவற்றைப் பயன்படுத்துவதன் மூலமே வறுமையையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் நீக்கலாம். பயிற்சி பெற்ற லட்சக்கணக்கான என்ஜினியர்களும் விஞ்ஞானிகளும் தேவை.

**நிலஉடைமை உச்சவரம்பு பிரச்சினை**

நில உடைமைக்கு உச்சவரம்பு கட்ட வேண்டுமென்று முடிவாகியிருந்தபோதிலும், பெரும்பாலான ராஜ்யங்கள் இலட்சியத்தை நிறைவேற்ற தவறிவிட்டன என்று திரு எஸ். என். தாஸ் அறிவித்தார்

**சென்னை நிதி அமைச்சர் பேச்சு**

இன்று அ இ கா. க. வில் தொழில அபிவிருத்தி கொள்கை பற்றி விவாதம் நடந்தது. சென்னை நிதி அமைச்சர் சி சுப்பிரமணியம் பேசுகையில், தொழில் அபிவிருத்தி அவசியமானாலும் யந்திரங்களை இறக்குமதி செய்வதால் அன்னியர் பொருளாதார ஆதிக்கம் நீடிப்பதற்கு இடம் தருவதாகவும் பலவித யந்திரங்களை இந்தியாவிலேயே உற்பத்தி செய்வதால்தான் உண்மையான தொழில் அபிவிருத்தி ஏற்பட்டதாகுமென்றும் கூறினர். அவர் தொடர்ந்து பேசியதாவது, "நமது தொழில்களை அபிவிருத்திசெய்ய அன்னிய உதவி அவசியமே. ஆனல் அன்னியரின் சுரண்டல் ஏற்படக்கூடாது.

**தனியார் துறை அவசியமாம்**

"நாட்டின பொருளாதாரத்தில் தனியார் துறை அவசியமே, ஆனல தனியார் தேசபக்தியுடன் நடந்துகொள்ளவேண்டும். தேசபக்தி குறைவாக நடந்தால், தனியார் துறைக்கு சர்க்காரின் உதவி நிறுத்தப்படவேண்டும்.

**சட்டவிரோதமான லாபங்கள்**

"தனியார் துறையில் மொத்த லாபங்கள் காட்டுவதில் மோசடி நடக்கிறது. இந்த லாபங்கள்குறைந்துவருகின்றன. வர்த்தக ஏஜெண்டுகள் லாபத்தில் பெரும் பகுதியை எடுத்துக் கொள்கின்றனர். இந்த முறையில் லாபங்களைச் சட்டரீதியாக காட்டாமல் தவிர்க்க வழியிருக்கிறது. அவ்வித சட்டவிரோதமான லாபங்களைச் சிருஷ்டிப்பது அபாயகரமான போக்கு. அது தவிர்க்கப்பட வேண்டும். இவ்வித சட்டவிரோதமான லாபங்கள் பதுக்கலுக்கே சமம்.

"தொழில்துறை தகராறுகளில் பெரும்பாலானவை அத்யாவசிய பண்டங்களின் விலை உயர்வால் ஏற்பட்டவையே ஆகும். ஆகவே ஊதியத்திற்கும் விலைவாசிகளுக்கும் தொடர்பு இருக்குமாறு தேசம் முழுவதற்கும் ஒரு கொள்கை அவசியமாகும்.

வேலை வாய்ப்புகளை அதிகரிக்க சிறு தொழில்களுக்கும் ஊக்கமளிக்கப்பட வேண்டும்."

பிற்பட்ட நிலையிலுள்ள பிரதேசங்களை அபிவிருத்தி செய்ய வேண்டுவது வாழ்க்கைத்தரஉயர்வுக்கு அவசியமென்றுர், டாக்டர் சுசிலா நையார்.

கிராமங்களைச் சுரண்டி செயற்கை உபரிகளைச் சிருஷ்டிக்கக் கூடாதென்றும் சில தொழில்களைக் கிராமப் பகுதிகளில் ஆரம்பிக்க வேண்டுமென்றும் திரு. தேபர் கூறினர்.

**தொழிலாளருக்கு வசதிகள்**

திரு. எஸ். பாந்தே பேசுகையில். தொழிலாளருக்குத் தொழில் நுட்பப் பயிற்சி அளிக்க வேண்டுமென்றும் ஜப்பானில் அநுசரிக்கப்படும் முறைப்படி, தொழிலாளருக்கு வசதிகள் ஏற்படுத்த வேண்டுமென்றும் கூறினர். ஜப்பானிய முறையை அவர் விளக்கிச் சொன்னதாவது: "ஜப்பானில் தொழிலாளிக்கு இலவசமாக வீடு, வைத்ய உதவி, உடை, குழந்தைகள் வாசிக்க வசதி இவை அளிக்கப்படுகின்றன. இந்த இலவச வசதிகள் அளிப்பதுடன் தொழிலாளிக்கு ஊதியமும் தரப்படுகிறது."

**காங்கிரஸ்வாதிகள் அஞ்ஞானம்**

ஐந்தாண்டு திட்ட அமுல் சம்பந்தமாக காங்கிரஸ் ஸ்தாபனத்தின் கடமைகள் பற்றிய அறிக்கையும் விவாதிக்கப்பட்டது. வர்த்தக மந்திரி திரு. லால் பகதூர் சாஸ்திரி விவாதத்தைத் துவக்கிப் பேசுகையில், ஐந்தாண்டு திட்டங்களில் காங்கிரஸ் வாதிகளுக்கு நம்பிக்கை வேண்டும்; அத்திட்டங்களை அவர்கள் நன்கு அறிந்துகொள்ள வேண்டும்; அத்திட்டங்களின் வெற்றிக்காக அவர்கள் தங்கள் நேரத்தை அர்ப்பணிக்க வேண்டும்.

ஒவ்வொரு கம்யூனிஸ்டும் நன்கு விஷயஞானமுள்ளவர்; கம்யூனிஸ்ட் தமது கட்சியின வேலைத்திட்டம், குறிக்கோள், வழிமுறை இவற்றை நன்கு அறிந்திருப்பதால் விவாதம் புரிவதில் வல்லவராக இருக்கிறார். காங்கிரஸ் வேலைத் திட்டங்கள் பற்றி போதிய அளவு தெரிந்து கொள்ளாதிருப்பதே காங்கிரஸ் வாதிகளின் குறைபாடாகும். கம்யூனிஸ்ட் கட்சி வேலைத் திட்டத்தைவிட காங்கிரஸ் வேலைத் திட்டமே சிறந்தது.

# காங்கிரஸின் கொள்கையற்ற தேர்தல் கூட்டணி!

## பரோடாவில் இ.எம்.எஸ்.கண்டனம்

பரோடா, செப். 27— இங்கு ஒரு மாபெரும்பொதுக் கூட்டத்தில் பேசுகையில் முன்னுள் கேரள முதலமைச்சர் தோழர் இ எம்.எஸ். நம்பூதிரிப்பாட், ராஜ்ய நிர்வாகங்களில் முறைகேடான முறையில் மத்ய சர்க்கார் தலையிடுவது, தேர்தல்களில் வெல்வதற்காக கொள்கை பற்ற கூட்டுறவுகள்-என்ற காங்கிரஸ் கட்சியின் கொள்கைக்கெதிராக மக்கள் தங்கள் கண்டனக் குரலை எழுப்பவேண்டுமென்று மக்களைக் கேட்டுக்கொண்டார்.

அத்தகைய கொள்கை தொடர்ந்து கையாளப்படுமேயானல் ஜனநாயகத்தில் மக்களின் நம்பிக்கை தளர்ந்துவிடும், என்றும் நம்பூதிரிப்பாட் குறிப்பிட்டார்.

அடிக்கடி மத்திய சர்க்கார் தலையிடுவதும், கிழக்கு மேற்கு பாகிஸ்தான்களில் மந்திரி சபைகள் கலைக்கப்பட்டதும்தான் பாகிஸ்தானில் ராணுவ ஆட்சியை ஏற்படுத்துவதில் போய் முடிந்தது என்றுர் இ. எம். எஸ்.

ஆயினும் ஜனநாயக விரோத நடவடிக்கைகளுக்கெதிராக மக்கள் கண்காணிப்புடன் இருப்பது, இந்தியாவில் அத்தகைய ராணுவ ஆட்சிக்கு இடமளிக்காது, என்றுர் இ. எம். எஸ்.

காங்கிரசின் கொள்கைபற்ற கூட்டுறவுகளைப் பற்றி இ. எம் எஸ். குறிப்பிடுகையில்; "காங்கிரஸ் கேரள சோஷலிஸ்டு கட்சியுடன் உறவு கொள்ள முயற்சித்து வருகிறது. இக்கட்சி கடந்த தேர்தலில் ஒரு ஸ்தானத்தைக்கூடப் பெறவில்லை.

ஆர். எஸ். பி யோ, போட்டியிட்ட 28-ல் 21 ஸ்தானங்களில் ஜாமீன் தொகையை இழந்தது. பி சோ. கட்சி, முஸ்லீம் லீகுடன் சேர்ந்து 9 ஸ்தானங்களைப் பெற்றது.

முஸ்லீம் லீக் என்பது ஒரு செத்தப் பிணம் என்று பிரதமர் நேரு 1957-ல் கூறினர். ஆனல் இப்பொழுது அதே லீகுக்கு கம்யூனிஸ்டுகளை எதிர்ப்பதற்காக உயிரூட்டப்படுகிறது என்று இ எம். எஸ் கூறினர்.

# உணவுக்காக உயிரிழந்தவர்களுக்கு அனுதாபம் தெரிவிக்க நேரு முன்வரவில்லை

## வங்கத்தைப் பற்றி கனல் கக்கும் நேரு கேரள சம்பவங்களின்போது எங்கிருந்தார்?

### பூபேஷ் குப்தாவின் ஆணித்தரமான கேள்வி

புதடெல்லி, செப். 27— ராஜ்ய சபை கம்யூனிஸ்ட் தலைவர் பூபேஷ் குப்தா இன்று வெளியிட்டுள்ள அறிக்கையில், நேரு அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கூட்டத்தில் மேற்கு வங்காள சட்டசபையில் பலாத்கார நிகழ்ச்சி என்று சுட்டிக் காட்டியதைக் கண்டித்தார்.

**பிரத்தியட்ச முறையில் பார்க்கவில்லை**

மேற்கு வங்க சட்டசபையின் எதிர்பாராத துரதிர்ஷ்டவசமான சம்பவங்களைக் குறித்து பிரத்யட்ச முறையில் விருப்புவெறுப்பின்றி பார்க்கவேண்டியது பிரதமர் நேருவுக்கு அழகாகும். ஆனல் அவர் இச்சம்பவங்களைக் கொண்டு கம்யூனிஸ்ட் கட்சியை தாக்குவதற்கு பயன்படுத்துகிருர்.

"பிரதமரின்கோபச் சொற்கள் மேற்கு வங்க அரசாங்கத்தினுடையவும் அங்குள்ள காங்கிரஸ் கட்சியினுடையவும் ஜனவிரோத போக்கை உறுதிப்படுத்தும்: மக்களுக்கெதிரான பலாத்காரத்தில் இறங்க மேலும் தூண்டிவிடும் என்று பயப்படுகிறேன்' இவ்வாறு பூபேஷ் கூறியிருக்கிருர்.

உணவு இயக்கத்தின்போது நடைபெற்ற தடியடிப்பிரயோகம் துப்பாக்கிப் பிரயோகம் இவற்றின் மூலம் ஏற்பட்ட உயிர்ச்சேதங்களை பூபேஷ் குறிப்பிட்டு, "மீட்க முடியாத இந்த நஷ்டத்தை குறித்து அனுதாபமாக ஒரு வார்த்தை சொல்லவோ, உற்றர் உறவினரை இழந்து தவிக்கும் குடும்பத்தாருக்கு இரக்கப்படவோ, பிரதமர் நேரு செய்யாதது வருந்தத்தக்கது" என்றுர்.

**கோபம் அன்று எங்கே போயிற்று?**

கேரள சம்பவங்களைச் சுட்டிக் காட்டி பூபேஷ் கூறியதாவது, நேர்மை தவறுத உமது பேச்சும், கோபக்கனலும், எதிர்பாராத எச்சரிக்கைகளும் கேரளத்தில் காங்கிரஸ் கட்சியினர் பலாத்கார நடவடிக்கைகளில் இறங்கியிருந்தபோது எங்கே போயிற்று என்று பிரதமர் நேருவை பூபேஷ் அறிக்கையின் மூலம் கேட்டார்.

**இடியோசை கேரளத்தில் ஒலித்திருக்கக்கூடாதா?**

பிரதமர் நேரு நல்லவராக நடந்து, தனது இடியோசையின் நூறில் ஒரு பங்கை கேரள காங்கிரஸினரின் காதுகளில் ஒலிக்கச் செய்திருப்பாரேயானல் ஜனநாயகம் கேரளத்தில் ஒருவேளை காப்பாற்றப்பட்டிருக்கும் என்றும் பூபேஷ் கூறியிருக்கிருர். (பி டி.ஐ)

# வெளிநாட்டுக் கொள்கை மாருது

## இலங்கை புதிய பிரதமர் அறிவிப்பு

கொழும்பு, செப். 27— இலங்கை பிரதமர் விஜயநந்தா தகநாயகா பி டி. ஐ நிருபரிடம் கூறும்போது இலங்கை அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கை பண்டாரநாயகா கடைபிடித்த கொள்கைபோன்றுதான் இருக்குமென்றுர்.

டெம்பிள் டிரீஸ் என்னும் அரசாங்க மாளிகையில் நடைபெற்ற பேட்டியில் தகநாயகா கூறியதாவது:

இந்திய பிரச்சினை (பிரஜா உரிமை) போன்ற முக்கிய பிரச்சினைகளில் முந்திய பிரதமர் கொண்டுள்ள கருத்தைக்குறித்து நான் நன்கு உணர்ந்துள்ளேன். புதிய மந்திரி சபையின் கொள்கை இவ்விஷயத்திலும் இதர வெளிநாட்டு கொள்கையிலும் பண்டாரநாயகா மந்திரி சபையின் கொள்கை போன்றே இருக்கும் என்று கூறினர்.

அவர் மேலும் கூறியதாவது: தற்போதைய பார்லிமென்டைக் கலைக்க வேண்டுமென்று கூறமாட்டேன். 1961 ஏப்ரல் மாதம்வரை அதன் முழுக்கால அளவும் அரசாங்கத்தை நடத்திச் செல்லத்தான் நாங்கள் நினைத்துள்ளோம் என்றுர்.

ஆசிய-ஆப்பிரிக்க பொருளாதார மகாநாட்டை கூட்டுவது பற்றி பண்டாரநாயகா ஆலோசனை வைத்ததைப் பற்றிய விஷயங்களிலும் இதர கொள்கை பற்றிய விவாதங்களிலும் இறங்க தகநாயகா விரும்பவில்லை.

உள்நாட்டு விஷயத்திலும்கூட கொள்கை மாற்றத்திற்கு இடமே இல்லை என்று நிருபரிடம் கூறினர்

உணவு வர்த்தகத்தைப்பற்றிய அரசாங்கத்தின் கொள்கையை கண்டனம் செய்யும் சேனநாயகாவுக்கு உணவு இலாகா மந்திரிப்பதவி கொடுத்திருப்பதும் பண்டார நாயகாவின் முடிவை ஒட்டித்தான் என்றும் அவர் கூறினர்.

இலங்கை வானொலியின் ஆங்கிலச் செய்தி வழியாக தகநாயகா இலங்கை மக்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளார். அதில் முந்திய பிரதமரின் கொள்கைகளை கடைப்பிடித்தொழுகுமாறு தான் ஏற்கனவே கூறியவற்றை மீண்டுமொருமுறை நினைவுப் படுத்தினர்.

தீவிர புத்தமத வாதியான தகநாயகா இன்று காலை 'டெம்பிள் டிரீஸில்' மதச்சடங்குகளில் கலந்து கொண்டார். அருகிலுள்ள புத்தகோவிலுக்குச் சென்று பிரதம மந்திரியானதற்கு விசேஷ ஆராதனைகள் நடத்தினர்.

ஞாயிறன்று பத்திரிகைகளெல்லாம புதிய பிரதமரின் வாழ்க்கைச் சரிதத்தைக் குறித்து நீண்ட செய்திகளையும், புகைப்பட விளக்கங்களையும் கொடுத்தது பள்ளி யாசிரியராக இருந்தவர் எங்ஙனம் பிரதம மந்திரியாக பதவி உயர்ந்தார் என்பதையெல்லாம் விளக்கமுயன்றன என்று கூறப்படுகிறது. (பி.டி ஐ)

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

களின் திறவுக்கும் அது கொண்டு போய்விடும்.

"இந்தியாவின் பிரதேச உரிமையைப் பாதுகாப்பதில் எங்கள் கட்சி இந்திய மக்கள் அனைவருடனும் ஒன்றுபட்டு நிற்கிறது இதில் அது யாருக்கும் சளைத்ததாக இருக்காது, என்று மீண்டும் அழுத்தமாக இந்த சந்தர்ப்பத்தில் வலியுறுத்த விரும்புகிறது.

"அதேசமயம் நம் நாட்டுக்கு சீனவின்மீது எவ்வாறு எவ்வித ஆக்ரமிப்பு நோக்கங்களும் கிடையாதோ, அதுபோலவே சோஷலிஸ்ட் சீனவும இந்தியாவின்மீது என்றும் ஆக்ரமிப்புச் செய்யாது என்பதில் நிர்வாகக் கமிட்டிக்கு நம்பிக்கையிருக்கிறது.

**எச்சரிக்கை**

"இன்றைய துரதிர்ஷ்டமான நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு, இந்தியாவைத் தங்கள் வலைக்குள் இழுத்துக் கொள்வதற்கு அமெரிக்காவும், இதர ஏகாதிபத்திய வட்டாரங்களும் முயற்சிசெய்வதுபற்றி மத்திய நிர்வாகக் கமிட்டி மக்களுக்கு எச்சரிக்கை விடுகிறது நம் நாட்டினுள்பிரஜா-சோஷலிஸ்ட், ஜனசங், சுதந்திரக் கட்சி ஆகியவற்றின் தலைவர்களைப் போன்ற மிகமிகப் பிற்போக்காளர்களும் பஞ்சசீலத்தைக் குழிதோண்டிப் புதைப்பதற்கும், நடுநிலைமை என்ற இந்தியாவின் வெளிவிவகாரக் கொள்கையை மாற்றவும் முயற்சிசெய்து வருகின்றனர். நம்முடைய நடுநிலைமைக் கொள்கை நம்முடைய தேச சுதந்திரத்தைப் பெரிதும் பலப்படுத்தியுள்ளது. உலக சமாதானத்திற்கும் ஒரு வலிமை வாய்ந்த சக்தியாக இருந்துவந்துள்ளது.

"நம் நாட்டின் வெளிவிவகாரக் கொள்கையின் நிரவிரோதிகள், இந்திய-சீன நட்புறவை எதிர்த்துத் தீவிரமாக இயக்கம் நடத்தி வருவது தற்செயலாக ஏற்பட்டதல்ல.

"மேலும், மக்கள் வாழ்க்கைப் பிரச்சினைகளிலிருந்து மக்களின் கவனத்தை வேறு வழியில் திருப்புவதற்காகவும், நாட்டின் ஜனநாயக இயக்கத்தை சிதைக்கவும், ஒடுக்குவதற்காகவும் இன்று ஜனநாயக, தேசபக்த சக்திகளை ஒற்றுமைப்படுத்தும் பெரிய சக்தியாகவும், மக்களின் உரிமைகள், நலன்கள் ஆகியவற்றின் பாதுகாவலனுகவும் உள்ள கம்யூனிஸ்ட் கட்சிக்கு எதிராக மக்களைத் தூண்டிவிடுவதற்காகவும், இந்திய-சீன உறவுகளில் ஏற்பட்ட இந்த வருந்தத்தக்க சம்பவங்கள் திட்டமிட்ட முறையில் மிகைப்படுத்தப்பட்டு, துர் உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றன"

பிறகு தீர்மானம், எவ்வாறு திபேத் பிரச்சினையிலிருந்து இந்திய-சீன உறவு சீர்கேடடைய ஆரம்பித்தது, என்று குறிப்பிட்டு தலாய்லாமாவின் ஆட்சேபகரமான நடத்தைக்குக் கண்டனம் தெரிவித்து, அவரது நடவடிக்கைகளுக்கு இந்திய சர்க்கார் முற்றுப்புள்ளி வைக்காததற்கு வருத்தம் தெரிவித்தது.

பிறகு நாட்டில் யுத்தவெறி தூண்டப்படுவதை தீர்மானம் கண்டித்தது.

இறுதியாக, இந்திய-சீன நட்புறவின் விரோதிகளுக்கெதிரும் இடங்கொடுக்க வேண்டாமென்றும், இந்த நட்புறவின் பாதையில் தோன்றியுள்ள சிக்கல்களைப் போக்குவதற்குப் பாடுபட வேண்டுமென்று மக்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளது.

இந்திய-சீன நட்புறவு இன்றைய சோதனையை சமாளித்து நிற்க வேண்டும், நிற்க முடியும், என்று உறுதியாக நம்பிக்கை தெரிவித்தது.

# சோஷலிஸ சக்திகளின் கை ஓங்கி ஏகாதிபத்யம் சரிகிறது

## சீனப் பிரதமர் சூயென்-லாய் முழக்கம்

ஹாங்காங், செப். 27— "அமெரிக்காவின் தலைமையில் ஏகாதிபத்திய வெறியர்கள் ஆக்ரமிப்பு முறையையும் போர் முறையையும் பிடிவாதமாகக் கடைபிடித்து வருகின்றனர். கெடுபிடிப் போரைக் கைவிடவும் மறுக்கின்றனர். இதனை ஏகாதிபத்திய முகாமிலேயே கஷ்டங்கள் அதிகரிக்கும். அம்முகாம் இதர நாடுகளின் தொடர்பு அற்றுத் தனிக்கவும் படும்" என்று சீனப் பிரதமர் சூயென்லாய் நேற்று அறிவித்தார்.

சீனவின் தேசிய தினம் சம்பந்தமாக சோவியத் யூனியன், இதர சோஷலிஸ்ட் நாடுகள் இவற்றின் அதிகாரிகளுக்கு நடத்தப்பட்ட விருந்தில் சீனப் பிரதமர் பேசினர். இத்தகவலை நவசீன செய்தி ஸ்தாபனம் வெளியிட்டுள்ளது.

"மேலை ஆதிக்கம் ஓங்கி சோஷலிஸ்ட் நாடுகளின் கை ஓங்க ஆரம்பித்திருக்கிறது உலக விவகாரங்களின் இவ்வித போக்கை எந்தச் சக்தியாலும் தடுத்துவிட முடியாது.

"சர்வதேச நிலவரத்திலும் பெரும் அபிவிருத்தி காணுகிறோம். ஏகாதிபத்யம் வீழ்ந்தும், சோஷலிஸம் ஓங்கியும், காலனி ஆதிக்கத்தின் மீது தேசிய விடுதலை சக்திகளும் போர் சக்திகள் மீது சமாதான சக்திகளும் வெற்றி கண்டும் வருகின்றன.

"இன்றுள்ள உலக நிலவரம் சோஷலிஸ சமுதாய நிர்மாணத்திற்கு மிகுக சாதகமாக இருக்கிறது."

**ஹோ சி-மின் வருகை**

பீகிங், செப். 27— வியட்நாம் ஜனநாயக குடியரசின் ஜனதிபதி ஹோ சி-மின் பாதுகாப்பு மந்திரி சகிதம் நேற்று பீகிங் வந்து சேர்ந்தார், அவரைவிமானநிலையத்தில் சீனக் குடியரசின் அக்ராசனர் லியு-ஷோ-சியும் இதர சீன தலைவர்களும் வரவேற்றனர். பஞ்சன்லாமாவும் விமான நிலயத்திற்கு வந்திருந்தார்.

**பீகிங்கில் அலங்காரம்**

சோவியத் பிரதமர் குருஷ்சேவ் தலைமையில் சோவியத் தலைவர்களும் பீகிங் வருகிருர்கள், அவர்களை வரவேற்க பீகிங் நகரை விசேஷமுறையில் அலங்கரித்திருக்கின்றனர்.

சிவப்பு, மஞ்சள் கொடிகளும் தோரணங்களும் சீன எழுத்துக்களால் பொறிக்கப்பட்ட கோஷங்களும் நகர் முழுவதிலும் காணப்படுகின்றன.

புதிய பார்லிமெண்டு மாளிகையின் 80 அடி உயர பளிங்கு தூண்களுக்கு மத்தியில் பிரமாண்ட சிவப்புநிறமான பரங்கிக்காய் உருவத்தில் லாந்தர் விளக்குகள் தொங்குகின்றன.

மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின், ஸ்டாலின் இவர்களின் பெரும் படங்கள் சதுக்கத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. சிறகுள்ள பாம்புகளின் சிலைகளும் சதுக்கத்தை அலங்கரிக்கின்றன.

## வெள்ளப் பெருக்கில் 43பேர் உயிரிழந்தனர்

### சூரத்தில் பெரும் சேதம்

சூரத், செப் 27— சூரத்தில் சென்ற வாரம் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கில் 43 பேர்கள் உயிரிழந்ததாகக் கூறப்படுகிறது. பாதிக்கப்பட்ட இடங்களில் நடத்திய சர்வேதான் மேற் குறிப்பிட்ட புள்ளி விபரத்தைத் தந்திருப்பதாக அதிகாரிகள் கூறுகின்றனர்.

மரணத்தின் பிடியிலிருந்து 1141 ஆண்கள், 647 பெண்கள், 1180 குழந்தைகள் மீட்கப்பட்டதாகவும் தெரியவருகிறது.

அடுத்த பருவமழை காலத்திற்கு முன்னுல், வெள்ளத் தடுப்பிற்கு முப்பத்து மூன்று லட்சம் ரூபாய் தேவைப்படுமென்றும் சூரத் முனிசிபல் தலைவர் கூறியதாகக் கூறப்படுகிறது. சேதமடைந்த பாதையை சீர்படுத்த மட்டும் நான்கு லட்சம் ரூபாய் தேவைப்படுமாம். பி டி ஐ

## மனைவியின் உயிரை காப்பாற்றினர்

### பண்டார நாயகாவின் கடைசி செயல்

கொழும்பு, செப் 27— சென்ற வெள்ளிக்கிழமையன்று பாதகனெருவனுல் சுடப்பட்ட இலங்கைப் பிரதமர் பண்டார நாயகாவின் கடைசி செயல் தன்னுடைய மனைவியின் உயிரைத் துப்பாக்கிச் சூட்டிலிருந்து காப்பாற்றுவதாயிருந்ததென்று இன்று அறிவிக்கப்படுகிறது. தற்போதைய இலங்கைப் பிரதமர் விஜயநந்தா தகநாயகா மேற்கூறிய விஷயத்தை இன்று வெளியிட்டார்

பி. டி. ஐ. நிருபரிடம் அவர் கூறியதாவது: துப்பாக்கியால் பண்டாரநாயகாவைச் சுட்டவன் வராந்தாவிலிருந்து வீட்டினுள்ளே புகுந்தான். ரிவால்வரின் கடைசி குண்டாகிய ஆறுவது குண்டை பண்டாரநாயகாவின் மனைவி ஸ்ரீமாவோ மீது குறி பார்ப்பதற்காகத்தான் அவன் சென்றிருக்கவேண்டும். ஸ்ரீமாவோ பண்டாரநாயகாவை தாங்கிக் கொள்ள ஓடிவந்தார். காயமடைந்த பிரதமர் துப்பாக்கி பிடித்தவனின் கையை பலம் கொண்டமட்டும் தாக்கியதால ரிவால்வர் தரையில் விழுந்து அதன் கடைசி குண்டு கண்ணாடி ஜன்னலை துளைத்தது என்று தகநாயகா கூறினர்.

# அணுகுண்டு சோதனை நடக்கும் இடத்தில் பிரவேசிக்க முயற்சி!

## லண்டனிலிருந்து செல்கிருர்கள்

லண்டன், செப். 26— பிரஞ்சு ஏகாதிபத்தியம் சஹாராவில் அணுகுண்டுப் பரிசோதனை செய்யும் இடத்தில் தடையைமீறி இங்குள்ள அணுகுண்டு எதிர்ப்பு நேரடி நடவடிக்கை கமிட்டித் தலைவர்கள் பிரவேசிப்பார்கள்

மைக்கேல் ராண்டேல், ஆசிரியரும் ஓவியருமாகிய பிரான்சிஸ் ஹாய்லண்டு, ரெவரண்டு மைக்கேல் ஸ்காட் ஆகியோர்கள் அடங்கிய ஒரு குழுவினர் அப்பிரதேசத்தில் நுழைவதற்காக அக். 9ல் கனு வந்து சேருவார்கள்.

## ஐக்-குருஷ்சேவ் பேச்சுகள்

பென்ஸில்வேனியா, செப் 26— ஐசனஹோவரும் குருஷ்சேவும் சர்வதேசத் தகராறுகளைப் பற்றி உடன்பாடு காண, இன்று மீண்டும் பேச்சு வார்த்தை நடத்தினர். பெர்லின், ஜெர்மனி, ஆயுதக் குறைப்பு, அணு ஆயுத சோதனை, அணுசக்தியை சமாதானக் காரியங்களுக்குப் பயன்படுத்தல், வர்த்தகம் ஆகியவை பற்றிப் பேச நிபுணர்கள் வரவழைக்கப்பட்டிருக்கிருர்கள்

பேச்சு தொடங்குமுன் ஐக்கும் குருஷ்சேவும் சேர்ந்து காலை உணவு உண்டபின், ஒரு மணி நேரம் தனிமையாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு பிறகு பேச்சுவார்த்தை துவக்க சபைக்குச் சென்றுர்கள்.

## பெரம்பூர் காலனி 'வெல்பேர்' கமிட்டி தேர்தல்

### லேபர் யூனியன் வெற்றி

சென்னை, செப் 27— பெரம்பூர் ரயில்வே காலனி 'வெல்பேர்' கமிட்டி தேர்தல் இன்று நடைபெற்றது. ரயில்வே லேபர் யூனியன் சார்பில் (எஸ். ஆர். எல. யூ) 6 தோழர்கள் போட்டியிட்டனர். போட்டியிட்ட ஆறு தோழர்களும் பெருவாரியான வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டனர் கடந்த 10 ஆண்டுகளாகக் காலனிக் கமிட்டியில் அங்கம் வகித்தவர்கள் தோல்வி அடைந்தனர். இந்த வெற்றி பெரம்பூர் ரயில்வே தொழிலாளர் மத்தியில் பெரும் எழுச்சியை ஏற்படுத்தியுள்ளது

வெற்றிபெற்ற தோழர்கள் பின்வருமாறு:

பி கிருஷ்ணராவ், சீனுவாசன் (7 பி டை) பாலகிருஷ்ணன், ரங்கநாதன், வெங்கடபதி, யாவான் (2 பி. டைப்).

## ஜப்பானில் புயல்

டோக்கியோ, செப். 27— ஜப்பானில் நேற்று ஏற்பட்ட புயலின் காரணமாக 554 பேர்கள் கொல்லப்பட்டனரென்றும், 2264 பேர் காயமடைந்தனரென்றும் 749 பேர் காணுமற்போயினரென்றும் ஜப்பான் தேசிய போலீஸ் ஸ்தாபனம் அறிவிக்கிறது. (ராய்டர்)

# சம்பளக் கமிஷன் சிபார்சுகள்

## நவ. 15-ல் சர்க்காரின் முடிவு

### அமைச்சர் கோபால் ரெட்டி தகவல்

எர்ணுகுளம், செப். 27— இந்திய ரயில்வே மந்திரி பி கோபால் ரெட்டி இன்று இங்கு பேசுகையில் மத்திய அரசாங்கம் இரண்டாவது சம்பளக் கமிஷனின் சிபார்சு பற்றிய முடிவை நவம்பர் 15-ம் தேதி எடுக்கும் என்றுர்.

அகில இந்திய சுங்க ஊழியர்களின் 4-வது வருடாந்தர மகாநாட்டை இங்கு திறந்துவைத்து பேசுகையில, சம்பளக் கமிஷன் சிபார்சுகள் வெளியிடப்பட்டதும் உணர்ச்சிவசப்பட்டு விடாதீர்களென்று மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு போதனை கூறினர்.

சிபார்சுகள் இலாகாக்களின் பரிசீலனையில் இருக்கிறதென்றும், இனி டந்தாசபையால பரிசீலிக்கப்படுமென்றும் கூறினர். மேலும் கூறுகையில் அவர் குறிப்பிட்டதாவது:

சம்பளக் கமிஷனின் சிபார்சுகள்மீது அரசாங்க சர்வீஸ் சங்கங்கள் பிரதிநிதிகளை அனுப்பி கோரிக்கைகளைக் கூறுவார்களே யானுலும் சிபார்சுகள்மீது நீங்கள் அவசியமற்ற ஆத்திரங்கொள்ள மாட்டீர்கள் என்று நம்புவதாகவும் கூறினர்.

'அரசாங்க ஊழியர்கள் மக்களுக்கு உதாரணமாக விளங்க வேண்டும். நீங்கள் கட்டுப்பாடாக இல்லாவிட்டால் நாட்டின் நிர்வாகம் திறம்பட நடக்கமுடியாததென்றும்' கோபால்ரெட்டி உபதேசம் செய்தார். —பி.டி ஐ.



# மார்க்கெட் நிலவரம்

**தங்கம், வெள்ளி**

சென்னை, செப். 28—

| | |
|---|---|
| சவரன் | ரூ. 79-8-0 |
| தங்கம் (ரெடி) | ரூ. 123-8-0 |
| தூசை தங்கம் | ரூ. 121-12-0 |
| வெள்ளி 100 தோலா எடை | ரூ. 207-8-0 |
| வெள்ளி 1 ரூ. எடை | ரூ. 2-1-6 |
| **மணிலா பயறு** | |
| 5?1 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு உயர்ந்த ரகம் | ரூ. 208 |
| மீடியம் | ரூ. 202 |
| **மணிலா எண்ணெய்** | |
| 600 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி (3 F.F.A.) (மொத்தவிலை) ரெடி | ரூ. 365-00 |
| அக்டோபர் | ரூ. 360-00 |
| டிசம்பர் | ரூ. 325-00 |
| **விளக்கெண்ணெய்** | |
| 600 ரா. பாரம் 1-க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) குருப்பத்தூர் | ரூ. 323-00 |
| சேலம் தாமரை அன்னம் 87½ ரா. டின் விலை | 25-50 |
| **தேங்காய் எண்ணெய்** | |
| [illegible] ரா. கொண்ட பாரம் 1-க்கு (விற்பனை வரி உள்பட) கொல்லம் சரக்கு | |
| எம். எஸ். மார்க்கு | 41 50 |
| அம்பு மார்க்கு | 40-50 |
| ராஜா மார்க்கு | 40-50 |
| **சர்க்கரை (3 அந்தர்)** | |
| பாரி என் | 118-00 |
| உப்பூரு | 118-00 |
| ராமன் கோட்டை | 113 00 |

# வானொலி

## சென்னை-1

30—9—59

**காலை முதல் ஒலிபரப்பு**

6-55 மங்கள இசை, 7-00 திருப்பாடல்கள், 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு, 7-15 தமிழில் செய்தி, 7-30 கே. எஸ். நாராயணஸ்வாமி வீணை 8-00 மதுரகீதம், 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

1-00 தேவாரம் 1-15 வாத்ய கோஷ்டி 1-30 கானமஞ்சரி 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 இசைச் செண்டு 2-00 தமிழில் செய்தி 2-10 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்றுவது ஒலிபரப்பு**

5-30 ஏ. முத்தையா வீணை 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 வன விலங்குகள் வாரம் 6-25 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி 7-30 ஊர் உயர்ந்தது சித்திரம் 7-45 இந்திய தொழில் பொருள்களின் தரக்கட்டுப்பாடு 8-00 எ. லக்ஷ்மி பாட்டு 8-30 National Programme Some aspects of Technical Education in India Talk (Relay from Delhi) 8-50 [illegible] 9-00 [illegible] கங்காதரன் பாட்டு 9-30 வேதாரண்யம் வேதமூர்த்தி நாகஸ்வரம் 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

## திருச்சி

30-9-59

**காலை முதல் ஒலிபரப்பு**

7-00 இசைக்கதிர் திருப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழ்ச் செய்தி 7-30 டி. எஸ். ராமமூர்த்தி புல்லாங்குழல் 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

1-00 பெண்ணுலகம் 1-30 கிளாரினெட் 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 மெல்லிசை 2-00 தமிழில்செய்தி 2-10 இன்டுக்கள் பவானி பாட்டு 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்றுவது ஒலிபரப்பு**

4-45 விவித பாரதி 5-45 இசைப்பயிற்சி 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச்செய்திகள் 6-15 மதராஸ் 2-ல் உள்ளபடி 6-25 கிராம நிகழ்ச்சிகள், 7-15 தமிழில் செய்தி, 7.30 ஊர் உயர்ந்தது சித்திரம் 7-45 இந்திய தொழில் பொருள்களின் தரக்கட்டுப்பாடு பேச்சு 8-00 டி. எஸ். ராமமூர்த்தி புல்லாங்குழல் 8-30 National Programme Some Aspects of Technical Education in India Talk (Relay from Delhi) 8-50 [illegible] 9 00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 வள்ளுவர் சொல்லோவியம் 9-20 இன்னிசை வடிவங்கள் 9-30 திரைப்பட இசை 10-00 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் [illegible] ஆசிரியர், ப. ஜீவானந்தம். [illegible]